


சென்னைச் சர்வகலாசாலையில் இவ்வாண்டு நடைபெற்ற
கான்வொகேஷனில் டிகிரி பெற்ற பெண்மணிகள்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 15 | சுக்கில௵ புரட்டாசி௴ ௧௳<br>1929௵ செப்டம்பர்௴ 16௳ | பகுதி 3 |

## கடவுள் வணக்கம்.

இப்பிறவி யென்னுமோர் இருட்கடலின் மூழ்கி நான்
என்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினை யெனுந்திரையின் எற்றுண்டு புற்புதம்
எனக் கொங்கை வரிசை காட்டும்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல் வந்து வந்தடிப்பச்
சோராத ஆசையாம் காருறு வர்னதி
சுரந்தெதன மேலு மார்ப்பக்
கைப்பரிசு காரர்போல் அறிவான வங்கமும்
கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டு மெளியேன்
செப்பரிய முத்தியாம் கரைசேரவும் கருணை
செய்வையோ சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே. (1)

பழுதுண்டு பாவையர் மோக விகாரப் பரவையிடை
விழுகின்ற பாவிக்கும் தன்னருட் புணையை வியந்தளித்தான்
தொழுகின்ற அன்பர் உளங்களிகூரத் திலங்கு மன்றுள்
எழுகின்ற ஆனந்தக் கூத்தனென் கண்மணி என்னப்பனே (2)

பாவிபடும் கண்கலக்கம் பார்த்து மிரங் காதிருந்தால்
ஆவிக் குறுதுணையார் ஐயா பாரபரமே (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் அடிகள் பிரபஞ்ச போகத்தில் மோகங் கொண்டு உழலும் தமக்கும் பேரின்ப முத்தி சித்திக்குமோ என்று ஐயுற்று இரங்குகிறார்.

(இ—ள்.) அறிவாகிய இறைவனே! ஒளி உருவான இன்பமே! பிறவி என்பது ஒரு பெருங் கருங்கடல். அதில் நான் மூழ்கிக் கரை காணாது தத்தளித்துக்கொண் டிருக்கிறேன். அக்கடலில் உள்ள அகங்காரம் என்னும் முதலை தனது வாயால் என்னைப் பற்றிக்கொண் டிருக்கிறது. இந்நிலையில் நல்வினை தீவினைகளாகிய அலைகள் என்னை மோதுகின்றன! மங்கையர் காம மயக்கமாகிய பெரும் புயற் காற்றானது அடிக்கடி கிளம்பி அடித்து வாட்டுகிறது. ஆசையாகிய காட்டாறு கங்கை நதிபோன்று பெருக் கெடுத்து இழுத்துக்கொண் டிருக்கிறது. அறிவாகிய மரக்கலமும் என்னை விட்டு அகன்றது! அந்தோ! யான் என்செய்வேன்! எமபடர்களாகிய கடற் கொள்ளைக்காரர் வந்து விடுவார்களே என்று பயந்து மதிமயங்கி கண்ணீர் அருவி பெருக்கும் எளியேன் பேரின்பக் கரை சேரும் வண்ணம் அருள் செய்வாயோ? என்பதாம்.

பிறவியைக் கடத்தல் அருமை என்பதுபற்றி வள்ளுவரும் "பிறவிப் பெருங்கடல்" என்றார். எத்தகையாரையும் "நான்" என்னும் அகங்காரம் விடாப் பிடியாய்ப் பற்றி மீட்சிக்கு வகையின்றித் துன்புறுத்தலின் அதனை முதலையாகவும், நல்வினை தீவினைகளே பிறவிக்குக் காரணமாகி உயிர்களை மோதித் தத்தளிக்கச் செய்தலின் அவ்வினைகளை அலைகளாகவும், காம இச்சையானது உயிர்களெல்லாம் செயல் இழந்து தன்னிற் சிக்குண்டு மயங்கும்படி செய்தலின் அதனைச் சண்டமாருதச் சுழலாகவும், ஆசைக்கோர் அளவில்லாது இடையறாது மேன்மேலும் அது பெருகிக் கொண்டே இருத்தலால் அதனைக் காட்டாறாகவும், அறிவு ஒன்றே சிறந்த ஆதாரமாகி மக்களை நன்னெறிப்படுத்த வல்ல தாகலின் அதனை மரக்கலமாகவும், எமபடர்கள் வந்தால் தவறாமல் உயிரைக் கவர்ந்து செல்வார்கள் ஆதலின் அவர்களைக் கடற் பிரயாணிகளிடம் கொள்ளை கொள்ளும் கள்வராகவும் உருவகஞ் செய்தார்.

மகரம்—முதலை. எற்றுண்டு—மோதுண்டு. புற்புதம்—நீர்க்குமிழி. துப்பு—பவளம். கைப்பரிசு—கையால் செலுத்தும் தோணி.

(2) இதனால் காம விகாரக் கடலுள் வீழ்ந்து கிடந்த தம்மையும் ஆனந்தக் கூத்தன் வலியத் தடுத் தாட்கொண்டான் என்பதைக் கூறுகின்றார்.

பழுது—இங்கே துன்பம். புணை—தெப்பம். வியந்து—பாராட்டி. மன்று—சபை.

(3) கண்கலக்கம்—துன்பம். உறுதுணை—பொருந்திய துணை.




## மாணவர் கடமை.

மாணவர்களிடம் காணப்படும் உற்சாகம், ஊக்கம், சுறுசுறுப்பு, கவலையற்ற தன்மை முதலியவை வேறு யாரிடமும் காணல் அரிது. மாணவர்களுக்குக் குடும்பக் கவலையோ உலகியல் விவகாரங்களோ இல்லாமையால் அவர்களுடைய மனம் களங்கமின்றித் தெளிந்து விளங்கும். இளமை முதலே மாணவர்களை நல்வழிப்படுத்தினாலொழிய பின்பு முதற்கோணல் முற்றுங் கோணலாக முடியும். கல்வி, அறிவு, ஒழுக்கப் பயிற்சிக்குரிய சிறந்த பருவம் இளமையே. இளமை நீங்கினால் எல்லாத் தொல்லைகளும் மனதைச் சூழ்ந்துகொள்ளுவது உறுதி. பின்னர் அறிவு விளக்கத்துக்கு ஆதாரமான எத்தகைய கல்வியும் ஏறாது. இதைக் கருதியே "இளமையிற் கல்" "இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்ற அமுதமொழிகளும் கிளம்பின.

தற்காலக் கல்விப்பயிற்சி முறைக்கும் முற்காலக் கல்விப்பயிற்சி முறைக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. ஐந்து பிராயம் முதல் பதினாறு பிராயம் வரை மாணவர் குருகுல வாசஞ்செய்தல் என்ற சம்பிரதாயம் முற்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது. குருகுல வாசமாவது மாணவன் ஆசிரியருடைய வீட்டிலேயே ஐந்து வயது முதல் பதினாறு வயது வரை கல்வி கற்றுக்கொண்டு வசித்துவருதல். அக்காலத்தில், மாணவன், எவ்வளவு பெரிய அரசன் அல்லது பிரபுவினுடைய பிள்ளையா யிருந்தபோதிலும் தன்னுடைய ஆசிரியருக்குப் பிக்ஷை எடுத்து அமுது செய்வித்துத் தானும் உண்ணவேண்டும் என்ற வழக்கம் பெரிதும் மதிக்கப்பட்டு அநுஷ்டானத்தில் இருந்து வந்தது. பதினாறு வயது முடிந்தபின்னர் தாய்தந்தையர் வந்து குரு

தக்ஷிணை செலுத்தி வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் அந்த மாணவனுக்கு மணம் முடித்து இல்லறத்தானாகச் செய்வது வழக்கம். இது பெரிதும் ஆரியர்களுடைய சம்பிரதாயமாயிருந்து பிற்காலத்தில் தமிழர்களிடத்திலும் சிறுபான்மை பரவியிருந்ததாகவும் தெரிகிறது.

முற்காலத்தில் தமிழ் மாணவரின் பயிற்சிமுறை எவ்வாறு இருந்தது என்று துணிந்து கொள்ளுவதற்குப் போதிய ஆதாரங்கள் கிடையாவிடினும் அறிவு விளக்கத்துக் குரிய சிறந்த முறையிலேயே அப்பயிற்சிமுறை இருந்திருக்க வேண்டும் என்று நம்புவதற்குப் பல ஆதாரங்கள் உண்டு. நமது பண்டைய தமிழ் இலக்கண நூல்களிலே ஆசிரிய—மாணவர் இலக்கணங்கள் நன்கு வரையறுக்கப் பட்டிருப்பதைக் கொண்டும், உலகம் போற்றும் வள்ளுவர் திருக்குறள் போன்ற ஒழுக்கநூல்கள், அகப்பொருள் புறப்பொருட் கருத்துக்கள் அமைந்து படிப்போர்க்குப் பேரானந்தம் விளைக்கும் எட்டுத்தொகை பத்துப்பாட்டு முதலிய சங்க இலக்கியங்கள், ஐம்பெருங் காவியங்கள் முதலியவற்றைக்கொண்டும் நமது தமிழகத்தில் எத்தகைய கல்வியும், பயிற்சி முறையும் இருந்திருக்க வேண்டும் என்பதை நன்கு ஊகித்து உணர்ந்து கொள்ளலாம். ஆனால் பழைய தமிழ்நாட்டு மாணவர்களைப் பற்றியும் பயிற்சி முறையைப் பற்றியும் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும் என்று இக்காலத்தில் கிராமாந்தரங்களிலும் பிறவிடங்களிலும் ஆங்காங்கு விளங்கும் திண்ணைப் பள்ளிக் கூடங்களைக்கொண்டு தீர்மானித்து விடாமலிருக்க வாசகர்களை வேண்டுகின்றோம். வள்ளுவரையும், கம்பரையும், இளங் கோவடிகளையும், சாத்தனாரையும், திருத்தக்க தேவரையும் இக்காலத்துத் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் உண்டாக்கிவிடும் என்று எந்தப் பைத்தியகாரரும் நம்பமாட்டார். பண்டைய தமிழ்ப்பெருமையும், பயிற்சி முறையும், முடியுடை மூவேந்தர்களும், ஏனைய தமிழ் மன்னர்களும், செல்வரும் போய், மேனாட்டுக் கல்வியும், பயிற்சி முறையும், நடையுடை பாவனைகளுமே ஆதர்சமாக விளங்கும் காலம் இது.

பழைய வழக்க ஒழுக்கங்களில் பற்றுள்ளங் கொண்டுள்ளவர்கட்குத் தற்காலக் கல்வியின் போக்கும் மாணவர்களின் போக்கும் வெகு விபரீதமாகத் தோன்றும். ஆனால் காலா காலத்தில் தோன்றும் மாறுதல் தத்துவத்தின் உண்மை உணர்ந்தவர்கள் இக்காலப்

போக்கை வெகு சகஜமாக மதிப்பார்கள். பிராசீனகால குருகுல வாசம் செய்தலோ, அல்லது பல்லும் விளக்காமல், காலைக்கடனும் முடிக்காமல் முதற்கோழி கூவும்போதே பள்ளிக்கூடத்தில் வந்து தூங்கிக்கொண்டு "ஏதான் அடி"க்கும், "கோதண்ட"த்துக்கும், "முட்டி விலங்கு"க்கும் தப்பித்துக் கொள்ளுவதோ இக்கால மாணவர்களால் முடியாது. அப்படியேதான் இருக்கவேண்டும் இல்லா விட்டால் உலகமே முழுகிப்போகும் என்று பெரியவர்கள் நினைப்பதும் தவறு. இவ்வாறு யாம் கூறுவதால் தினந்தோறும் சினிமாப் படக்காட்சிகளைக் கண்டு அப்படங்களில் நடிக்கும் "வீரர்"களைப் போலவே தாங்களும் ராஜாக்காய் இருக்கவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு, நாளுக்கொரு மயிர் வெட்டும் வேளைக்கொரு மீசை வெட்டும் வெட்டிக்கொண்டும், நவநவமான கோட்டு, சூட்டு, பூட்டுகளையும் கண்ணுடிகளையும் மாட்டிக்கொண்டும், சிஸர்ஸ், கோல்டு பிளேக், விக்டோரியா சிகரெட்டுகளைப் பிடித்துக்கொண்டும், சிற்றுண்டி மதக்கத்தால் சரியான உணவு கொள்ளாமலும், கல்லூரிகளில் இன்னொருவனைக்கொண்டு ஆஜர் சொல்லச்செய்து விட்டும், சொந்த ஊரில் தங்கள் நிலைமை தெரியாத தாய் தந்தையர் மகன் பி. ஏ. படிக்கிறான், எம். ஏ. படிக்கிறான் என்று பெருமையாக மற்றவர்களிடம்சொல்லி மகிழ்ந்துகொண்டு கேட்டபொழுதெல்லாம் கடன் பட்டாவது பணம் அனுப்பிக்கொண்டிருக்க நகரங்களில் ஆர்ப்பாட்டம் செய்துகொண்டு தப்பித்தவறி ஒரு நாளைக்குக் கலாசாலைக்குப் போய்விட்டால் ஆசிரியர்களை வாட்டி வளைவெடித்துக் கொண்டும் திரியும் இக்காலத்திய ஒருசில (அநேக என்று கூடச் சொல்லலாம்) மாணவர்களின் நிலைமைதான் சரியானது என்பது அருத்தம் அல்ல.

இது சுதந்தரகாலம். ஒவ்வொரு அமிசத்திலும் சுதந்தரம் வேண்டப்படுகிறது. நிர்ப்பந்தங்களும் கட்டுப்பாடுகளும் தகர்த்து வீழ்த்தும்படியான கிளர்ச்சிகள் உலகெங்கும் நடைபெறுகின்றன. இந்த நிலைமையில் நமது மாணவர்கள் பழைய சம்பிரதாயப்படிதான் நடக்கவேண்டும் என்று நாம் வற்புறுத்தக் கூடாதென்றாலும் இவர்களும் காலதேச வர்த்தமானங்களை அறியாமல் ஒரே அடியாக ஆகாயத்தில் பறந்துபோக விரும்புவதையும் நாம் விரும்பவில்லை. இக்கால மாணவர்களுக்கு முற்கால மாணவர்களைக் காட்டிலும் பலவித சௌகரியங்கள் இருக்கின்றன. அச்சு இயந்திர விசேஷத்தால்

புத்தகங்கள் ஏராளமாகி ஆசிரியர் நேரில் இருந்து போதிப்பதால் உண்டாகும் பலனைப்போன்ற பிரயோஜனந் தரக்கூடிய விளக்கவுரை, குறிப்புரை, ஆராய்ச்சி யுரை முதலியன உள்ள புத்தகங்களும் மலிந்துவிட்ட படியால் குரு சிஷ்ய கிரமமாக குருகுல வாசஞ் செய்து ஓத வேண்டிய அவசியமோ அல்லது குளிர் காய்வோனைப் போன்று கிட்ட நெருங்காமலும் தூரத்தில் நீங்காமலும், நிழலைப் போன்றும் ஆசிரியனை விட்டுப்பிரியாமல் இருந்து, நிறைந்த மன தோடு எந்த வகையில் ஆசான் மகிழ்ச்சி அடைவானோ அந்த வகை யில் நடந்து வழிபடும் நிர்ப்பந்தமோ இக்காலத்தில் கைநழுவ விடப் பட்டது. போனது போகட்டும். மாணவர்கள் எக்காலத்தும் மற வாமல் கடைப்பிடிக்க வேண்டிய பல அருங்குணங்கள் உண்டு. இக்கால மாணவர்கள் எல்லாரும் ஆசிரியன்மாரிடம் அன்பற்றவர்கள் என்றோ கீழ்ப்படியுங் குணம் இல்லாதவர்கள் என்றோ, தங்களுக் குரிய கடமைகளினின்றும் தவறியவர்கள் என்றோ நாம் கூறுவ தாக மாணவ நண்பர்கள் எம்மீது சீற்றங்கொள்ளா திருப்பாராக. சாதாரணமாக யாம் கண்ட அநுபவத்தையே ஒரு சிறிது மேலே கூறினோம். பரஸ்பர உண்மை அன்பு ததும்பிய—பயண உபசாரங் களின்போது கண்ணீர் விட்டுக்கதறிய ஆசிரிய மாணவர்களையும் யாம் கண்ணாரக் கண்டிருக்கின்றோம்.

பழைய காலத்தில் தமிழ்மாணவர்களின் உத்தம குணங்களா யிருந்த ஆசிரிய வழிபாடு, அவன் குணத்தொடு பழகல், குறிப்பிற் சார்தல், இருவென இருத்தல், சொல்லெனச் சொல்லல், நீர் வேட்கை கொண்டவனை போன்று கல்விப் பொருள் ஆர்வங்கொண்ட வனாயிருத்தல், சித்திரப்பாவை போன்று அடக்கங் காட்டல், கேட்ட வற்றை விடாது உள்ளத்து அமைத்தல், கேட்டவை நினைத்தல், மீண்டும் ஆசானைச் சார்ந்து இருகால் முக்கால் கேட்டல், மாணவ ரோடு பயிலுதல், வினாதல், விடை கொடுத்தல் ஆகிய அருங் குணங்களோடு பொது அறிவு, எந்த விஷயங்களையும் ஊன்றி நோக்கிப் பகுத்தறியும் தன்மை, விசாலநோக்கம், தன்னம் பிக்கை, உடல் நலம் பேணும் ஆசை, பொறுப்பு, தேசாபிமானம் முதலிய நறுங்குணங்களையும் போற்றிப் பெற முயலுதல் நமது மாணவர்களுக் குரிய முக்கிய கடமையாகும்.

நமது நாட்டில் இப்போது நடை முறையில் இருக்கும் கல்வி யில் பெருங் குறைகள் நிறைந்து கிடக்கின்றன. ஒரு மாணவன்

ஏராளமான பொருளைச் செலவு செய்து படிப்பை முடித்துக் கொண்டு வெளியில் வரும்போது வேலை இல்லாத் திண்டாட்டம் அவனுடைய மனதைப் பிளக்கும்படி செய்கிறது. குமாஸ்தா வேலையும், டாக்டர் வேலையும், வக்கீல் தொழிலும் எத்தனை மாணவர்களைத் தாங்கிக் காப்பாற்றி விடும்? தவிர விவசாயத்திற்கோ வியாபாரத்திற்கோ கைத்தொழிலுக்கோ நமது மாணவர்கள் ஒரு சிறிதும் தகுதி இல்லாதவர்களா யிருக்கிறார்கள். உதாரணமாக கிராமாந்தரங்களிலிருந்து நகரங்களுக்கு வந்து கலாசாலைகளில் படிக்கும் மாணவர்களை எடுத்துக் கொள்ளுவோம். இவர்கள் பெரும்பாலும் விவசாயிகளுடைய மக்களாகவே இருப்பார்கள். நகரங்களுக்கு வந்தவுடன் அவர்களுடைய நிலைமையே முழுவதும் மாறி விடுகிறது. தமாஷாக்களிலும் அலங்காரங்களிலும் மயங்கிக் காலங் கடத்திவிட்டு அரை குறைப் படிப்போடு சொந்தவூர் சேர்ந்து அங்கும் தங்க மனங் கொள்ளாமல் நண்பர் குழாங்களோடு கண்ட விடங்களில் திரிந்து குடும்ப நாசம் செய்கிறவர்களைத் தள்ளி விட்டாலும், ஏதோ கிரமமாகப் படித்துப் பட்டம் பெற்றிருப்பவர்கள் நிலைமையும் மோசமாகத்தானிருக்கிறது. இவர்களுக்கும் விவசாயத்தில் மனம் செல்லுவதில்லை. இவர்கள் தாங்கள் பயின்ற ஆங்கிலக் கல்வியின் ஆதாரவைக் கொண்டு மேனாடுகளில் சாஸ்திரீயமாக நடக்கும் விவசாய நுணுக்கங்களைத் தெரிந்து தங்கள் நிலங்களிலும் அத்தகைய முறைகளைக் கையாள ஏற்பாடு செய்வதோடு ஏனையோருக்கும் வழி காட்டலாம். ஆனால் பட்டம் பெற்றவுடன் வக்கீலாகவோ டாக்டராகவோ வர முயற்சி செய்து, நகரங்களில் நல்ல வீடு வாங்கி போர்டு தொங்க விட்டு ஊரிலிருந்து பணம் வரவழைத்து மோட்டார் சவாரி செய்வதோ, அல்லது சர்க்கார் உத்தியோகத்திற்குச் சிபார்சு பிடிப்பதோ தான் இவர்களுடைய மணியமாகவும் இருக்கிறது. இது கல்வியிலுள்ள குறையைக் காட்டுகிறதே யொழிய இந்தப் பட்டதாரிகளின் குறைதான் என்று முழுப் பழியையும் இவர்கள் மேல் போட்டு விட முடியாது.

மாணவர்களின் கடமையைச் சொல்ல வந்த விடத்து அவர்களுக்குச் சம்பந்தமான கல்வியின் குறையை ஒரு சிறிது சொல்ல நேர்ந்தமையை மற்றொன்று விரித்தல் என்னும் குற்றமாகக் கொள்ளாதிருக்கும்படி வாசகர்களை வேண்டுகிறோம்.

சாதிசமய வேற்றுமையாலும் பொருளற்ற வழக்க வொழுக்

கங்களாலும் சுதந்தரமிழந்து ராஜீய சமூக அடிமை விலங்கு பூண்டிருக்கும் நமது நாட்டில் இத்தகைய அடிமைக் கல்வியும் முற்போக்கு உணர்ச்சி யற்ற மாணவர்களும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போவதால் பரிபூரண சுயேச்சை சுலபத்தில் கிடைத்து விடும் என்று நம்ப முடியுமா? என்று கேட்கின்றோம்.

வயது முதிர்ந்த பிற்போக்குக் கொள்கையுடையவர்களைப் பற்றியோ, பட்டம், பதவி, கட்சித்தலைமைகளுக்காகப் பாமரமக்களை ஏய்க்குந் "தலைவர்"களைப் பற்றியோ நாம் அதிகக் கவலை கொள்ளவில்லை. எதிர் காலத்தில் நாட்டின் சிறந்த குடிமக்களாக வரவேண்டியவர்களும் சுயராஜ்யப் பொறுப்பை ஏற்று நடத்த வேண்டியவர்களும் மாணவர்களே யாதலால் இவர்களுடைய நலத்தில் யாம் பெரிதும் கவலை செலுத்துகின்றோம்.

மாணவர்கள் தங்களுக்குரிய பாடங்களோடு ஓய்வு நேரங்களில் பத்திரிகை படித்தலை ஒரு முக்கிய கடமையாகக் கொள்ளவேண்டும். அப்போது தான் உலகியல் அறிவு உதயமாகும். வெறும் புஸ்தகப் புழுக்களாகவே இருந்து விடக்கூடாது.

சுதந்தரம் பெற்றிருக்கிற தேசங்களின் வரலாறுகளையும், சுதந்தரத்திற்காகப் போராடிய அறிஞர் வரலாறுகளையும் ஒவ்வொரு மாணவனும் அறியக் கடமைப்பட்டிருக்கிறான்.

பொருளாதார உணர்ச்சியை ஒவ்வொரு மாணவனும் அடைய முயல வேண்டும். அதோடு உலகத்தில் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளின் பொருளாதார நிலைமையையும் அவ்விடங்களில் நடைபெறும் வியாபாரம், கைத்தொழில், விவசாயம் முதலிய விசேஷங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

நமது கிராமங்களிலுள்ள பாமரமக்கள், தாழ்த்தப்பட்ட மக்கள் முதலியவர்களுக்கு மாணவர்கள் விடுமுறைக் காலங்களில் சென்று சுதந்தர உணர்ச்சியும், சுகாதார அறிவும் தற்கால உலகியல் போக்கும் உண்டாகும்படி பிரசாரம் செய்ய வேண்டும்.

பகலில் வேலை செய்து படிக்கச் சௌகரிய மில்லாதிருப்பவர்களுக்கு இராப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தும் படியான உணர்ச்சியையும் அறிவையும் ஆங்காங்கு உள்ள மக்களுக்கு உண்டாக்க வேண்டும். தாங்களும் அவைகளை மேற்பார்த்து அவற்றின் முன்னேற்றத்தில் கவலை செலுத்தி வரவேண்டும். அரசியல் கட்சிப் பிணக்கு

களில் மாணவர்கள் மாட்டிக் கொள்ளாமல் இம்மாதிரியான தொண்டு செய்வதால் அவர்களுக்கு எத்தகைய கெடுதியும் நேராது.

மாணவ நண்பர்களே! நீங்கள் காலந்தவறாமல் கலாசாலைகளுக்குச் சென்று உரிய பாடங்களை உயிராகப் போற்றுவதோடு யாம் மேலே காட்டிய விஷயங்களையும் உங்கள் கடமையாகக் கருதவேண்டுகின்றோம். ஒழுக்கம் ஓம்புக. உண்மை கடைப் பிடிக்க. உடல் நலம் பேணுக.

"...............................................
சொல்லிய பொருண்மை சொல்லியாங்கு உணர்தலும்
சொல்லிய பொருளொடு சூழ்ந்து நன்கு உணர்தலும்
தன்னோ ரன்னோர்க்குத் தான் பயப்படுதலும்
செய்ந்நன்றி அறிதலும் தீச்சார்பு இன்மையும்
மடிதடு மாற்றம் மானம் பொச்சாப்புக்
கடுநோய் சீற்றம் களவே காமம்
என்றிவை இன்மையும் சென்று வழிபடுதலும்
அறத்துறை வழாமையும் குறிப்பறிந்து ஒழுகலும்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
நீட்டவை வினவலும் விடுத்தலும் உரைத்தலும்
உடைய ராகி நடை யறிந்து இயலுநர்
நன் மாணுக்கர் என்ப............................."

—பேராசிரியர்

களி மடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற்கு அஞ்சித்
தடுமாறு உளத்தன் தறுகணன் பாவி
படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே.

—பவணந்தி.

ஓம் தத் ஸத்.

---




## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(77-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.)

### பிரமாதத் தியாகம்.

மோக்ஷத்தைக் கோரும் பண்டிதன் இந்தச் சமாதி விஷயத்தில் பிரமாத மடையக்கூடாது. (பிரமாதம்=அவசியம் செய்யத்தக்கதை மறந்துவிடுதல்.) சூரியன் அஸ்தமித்த வளவில் இருள் சூழ்ந்து கொள்வதுபோல, பிரமாதத்தினால் மாயை மூடிக் கொள்ளுகின்றது. ஆகையால், பண்டிதர்கள் சுவானுபவத்தை விடுத்துக் கணநேரமாயினும் இருக்தலாகாது. சத் புருஷர்களுக்குச் சுவானுபவத்தில் பிரமாதம் எதுவுண்டோ அதுவே மிருத்யு வாகுமன்றி எமன் மிருத்யு வன்று. எவன் இச் சமாதியில் பிரயாசப்படுகிறானோ அவனுக்கு விகற்பம் (பிரபஞ்ச வாசனை) உண்டாதவில்லை. இந்தச் சமாதியினாலேயே 'சர்வமும் தான்' எனும் பாவமு முண்டாகும். இச் சர்வாத்ம பாவமே கைவல்யமா மன்றோ? ஞானிக்கு சர்வாத்ம பாவமே பிரஹ்ம ஞானத்தின் பலமாக அறியப்படுகின்றது. ஜீவன் முக்தனுக்கு சர்வாத்ம பாவத்தின் பலமே ஆத்மானந்தத்தின் அனுபவமாகும். சமாதி வாயிலாக 'நான், எனது' என்னும் இவை முதலான அசத்துப் பொருள்களை ஆத்மாவாகக் கிரகிப்பதும் வாசனை மயமுமாகிய எந்தக் கிரந்தி (முடிச்சு) உளதோ அது அடங்குகிறது. கர்ம பந்தம் நசிக்கின்றது. பிரதாபந்த மற்றதாகிய 'பிரஹ்மமே நான்' என்னும் ஞானம் உண்டாகின்றது. சுத்த சித்தமுடைய முமுட்சுக்களுக்கு சத்ரூபமாகிய ஆத்மாவொன்றே யென்னும் எந்த ஞானமுளதோ அதுவே, பிரஹ்ம சொரூபத்தோ டிருத்தலேயே வடிவமாகக் கொண்டுள்ள மோக்ஷத்திற்குத் தடையற்ற வழியாகும். ஆதலால், சீடனே! நீயும் பிரமாத மற்றவனாய் அறுவகைச் சமாதிகளையும் செய்து அகங்காரமென்னும் கிரந்தியை நன்றாய்ச் சுட்டெரித்து எப்பொழுதும் பிரஹ்மானந்த வாரிதியில் மூழ்கி விளையாடிக்கொண் டிருப்பாயாக.

### யோகம்.

பிரஹ்மாகார விருத்தி சலனமற் றிருக்தலாகிய நிர்விகற்ப சமாதியை யோக சாஸ்திர மறிந்தோர் யோகம் என்பர்.

## அஷ்டாங்கம்.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னு மிவ்வெட்டும் யோகத்திற்கு அங்கமாகப் பெரியோர்களால் கூறப்படும். இவற்றுள்,

(1) இயமம்:—'சர்வம் பிரஹ்மம்' என்னும் ஞானத்தினால் இந்திரியங்களை யடக்குதல் இயமமாம். இது பிரஹ்ம ஞானத்திற்குச் சஜாதீயமாகவுள்ள விருத்திகளை இடைவிடாது செய்தலையும் விஜாதீயமாகவுள்ள விருத்திகளை விடுத்தலையும் ரூபமாக வுடையது. ஆகையால் இதனைப் பன்முறை அப்பியசிக்க வேண்டும்.

(2) நியமம்:—பிரஹ்ம ஞானாப்பியாசம் நியமமாகச் செய்யப்படின் பிரஹ்ம ஸ்வரூபானுபவ முண்டாகும். ஆகையால் அந்த ஞானாப்பியாசமே நியமமாம்.

(3) ஆசனம்:—சகல பதார்த்தங்களையும் பிரஹ்மஸ்வரூபமாகவே பாவித்தல் ஆசனமாம். யோக நூல்களிற் கூறப்பட்டுள்ள சுவஸ்திகை முதலிய ஆசனங்கள் தக்கவையேதுவாம்.

(4) பிராணாயாமம்:—மனோவிருத்திக ளனைத்தையும் விடுதலே பிராணாயாமமாம். இதில் பிரபஞ்சம் மித்தையா மென்றெண்ணி அப் பிரபஞ்ச வாசனைகளை நிஷேதித்தல் இரேசகமாம்; பிரஹ்மமே நான் என்னும் விருத்தி எதுவோ அது பூரகமாம்; அந்த விருத்தி சலியாதிருத்தலே கும்பகமாம். இந்தப் பிராணாயாமம் ஞானிகளுக் குரியதாம். பிராணவாயுவை நிறுத்துதலாகிய பிராணாயாமமோ அஞ்ஞானிகளுக் குரியதாம்.

(5) பிரத்தியாகாரம்:—திருசிய பதார்த்தங்களினிடத்து ஆத்மாவத்தை விடுத்து மனமானது சித்ரூபமாகிய ஆத்மாவினிடத்து மூழ்கி யிருத்தலே பிரத்தியாகாரமாம். எங்கெங்கே மனம் போகிறதோ அங்கங்கெல்லாம் பிரஹ்மபாவனை கொள்வதன் வாயிலாக இதனை அப்பியசித்தல் வேண்டும்.

(6) தாரணை:—மனத்தின் தாரணை (சலியா நிலை)யே சிறந்ததாகிய தாரணை யெனப்படும்.

(7) தியானம்:—பிரஹ்மாகார விருத்தியினால் பிரபஞ்ச விஷயங்களை அவலம்பியா திருத்தல் தியானமாம்.

(8) சமாதி:—விருத்தி பிரஹ்மாகாரமா யிருக்கையில், தான் சரீரேந்திரிய மன முதலியவற்றின் சகல விபவகாரங்களையும் விட்டவனா யிருத்தலின், அந்த விருத்தியையும் மறத்தல் சமாதியாம். இது சம்யக்தியான மெனவும் படும். (சம்யக=மேலான)

## சமாதி விக்கினங்கள்.

சீடனே! சமாதி செய்யப்படும்பொழுது ஆத்மானுசந்தானமில்லாதிருத்தல், மந்தத்தன்மை, போகங்களினிடத்து இச்சை, பயம், அஞ்ஞானம்,

சித்தம் பல விஷயங்களில் வியாபித்தல், வீரிய மின்மை, சூனிய பாவம் என்னு மிவ் விக்கினங் (தடை)கள் பலாத்காரமாகவேனும் வரும். இவற்றைப் பிரயத்தினத்தால் விலக்கவேண்டும். ஞான குமாரா! இந்தத் தடைகளை விலக்கி, பிரமாத மின்றியவனாய் இந்திரிய நிக்கிரகமுள்ளவனாய்ச் சமாதி நிஷ்டையினால் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடையக்கடவாய்.

## சீடன் சுவானுபவம்.

இங்ஙனம் கூறிய குருவின் வாக்கியங்களாலும் சுருதிப் பிரமாணங்களாலும் சீடன் பர தத்துவத்தை யறிந்துகொண்டு ஆத்ம தியானத்தினால் ஜிதேந்திரியனாயும் சாந்தாகார சித்தனாயும் ஓரிடத்தில் சலனமற்றவனாய் ஆத்ம நிஷ்டை யுடையவனாயினன். புத்திமானாகிய அவன் மனத்தை நெடுநேரம் தன் நிஜசொரூபத்தில் நிறுத்தி, சமாதியினின்றெழுந்து குருவைச் சேர்ந்து, மீண்டும் நமஸ்கரித்துக் கூறுவானாயினன். குருமூர்த்தி! நித்தியானந்த ரூபரும் சாந்த வடிவினரும் அகம்பாவ ரகிதருமாகிய உமக்கு நமஸ்காரம். எந்த உமது கடைக்கண் பார்வையால் இரண்டாவதற்ற பிரஹ்மமே யானேனோ அந்த உமது மகிமைக்கு அளவே யில்லை. அத்தகைய தயைக்கு இருப்பிடமான உமது மகிமைக்கு நமஸ்காரம். குருநாதா! கற்ப காலத்தில் ஜலமானது உலக முழுதும் நிரம்பி யிருக்கிறதுபோல, நான் உலக முழுவதிலும் நிரம்பி யிருக்கிறேன். இனி நான் செய்யத்தக்கது யாதுளது? போகத்தக்க விடம் எது? அடையவேண்டியது யாது? விடத்தகுவது எது? கிருபைக் கடலே! மேலான ஞானானந்த சாகரமாயுள்ள வென்னிடத்தில் மாயையாகிய காற்றால் பிரஹ்மாண்டங்களும் நீர்க்குமிழிபோலத் தோன்றித் தோன்றி யழிகின்றன. சற்குரு! நான் நித்தியானந்த வடிவினனானேன். நான் ஆத்மாவே யானேன். உமதனுக்கிரகத்தால் நான் பரிபூரணனானேன். நான் கைவல்யம் பெற்றவனானேன். நான் அகர்த்தாவும் அபோக்தாவும் நிஷ்கிரியனுமானேன். நான் பரிபூரணானந்த சொரூபனும் சதாசிவனுமானேன். நான் உமது கடாக்ஷமென்னும் சந்திரிகையால் சம்சார தாபங்களாலுண்டான கஷ்டங்களைத் தொலைத்து க்ஷணப்போதில் நாசமற்றவனாய் அகண்டானந்தமாகிய ஆத்ம வஸ்துவை யடைந்தேன். விலக்ஷணனாகிய ஆத்மாவை குளிர்ச்சியாவது வெப்பமாவது தீமையாவது நன்மையாவது தொடுவதில்லை. விளக்கானது வீட்டைப் பிரகாசிக்கச் செய்வதுபோல திருக்ரூபனாகிய ஆத்மா திருசிய வஸ்துக்களைப் பிரகாசிக்கச் செய்கிறான். வீட்டின் நன்மை தீமைகள் விளக்கைத் தீண்டாமைபோல, திருசியங்களின் குண தோஷங்கள் ஆத்மாவைத் தீண்டுவதில்லை. எப்படிச் சூரியனுக்கு உலகோர் புரியும் கர்மங்களினிடத்துச் சாஹாத்துவமுளதோ, எப்படி அக்கினிக்கு இரும்பினிடத்துத் தகிக்கச் செய்யும் பாவமுளதோ, எப்படி கயிற்றிற்கு ஆரோபிக்கப்பட்ட வஸ்துவினுடைய சம்பந்தமுளதோ அப்படியே கூடஸ்தனாகிய சின்மாத்திர வடிவ னெனக்கும் சாக்ஷி மாத்திரத் தன்மையே யுளது.

**சீடன்:**—இவ்வாறு சொல்லிக் குருவைப் புகழ்ந்து பக்தியினால் நமஸ்கரித்தவனாய், முமுட்சுக்களின் உபகாரத்திற்காகக் கேட்கவேண்டிய அம்சங்களைக் கேட்கத் தொடங்கினான்.

பகவானே! ஜீவன் முக்தர் விதேக முக்தர்களுடைய அனுபவ லட்சணத்தைக் கிருபை கூர்ந்து தெரிவித்தல் வேண்டும்.

## ஞான பூமிகா லட்சணம்.

**குரு:**—எதை அறிவதனால் உன்னால் இப்பொழுது எது கேட்கப்பட்டதோ அது முழுவதும் தெரிந்துகொள்ளப் பட்டதாகுமோ அத்தகைய ஞான பூமிகளின் லட்சணத்தை யுனக்குக் கூறுகிறேன், கேள். சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவா பத்தி, அசம் சத்தி, பதார்த்தா பாவனை, துரியம் என்று ஞான பூமிகள் ஏழாகும். அவற்றுள்,

(1) சுபேச்சை:—நான் மூடனாகவே யிருப்பதேன்? சாஸ்திரத்தினாலும் சத் புருஷர்களாலும் ஆத்ம ஸ்வரூபத்தை யறியக்கடவேன் என்று வைராக்கிய பூர்வமாயுண்டாகு மிச்சை பண்டிதர்களால் சுபேச்சை எனப்படும். (சுப இச்சை)

(2) விசாரணை:—வேதாந்த சாஸ்திர விசாரணை ஞானிகள் பணிவிடை சம்சாரத்தினிடத்து விரக்தி இவை முதலில் உண்டாகும்படி எந்த சத் புருஷர்களின் நடக்கையில் பிரவிர்த்தி யுண்டாகிறதோ அது விசாரணையாம்.

(3) தனுமானசி:—எதனிடத்து மனம் விசாரணை சுபேச்சை என்னும் இரண்டு பூமிகளால் விஷயங்களினிடத்து விரக்தியினால் சூட்சுமத் தன்மை யெய்துகிறதோ அந்த நிலை தனுமானசி எனப்படும். (தனுமானசி=மனத்தின் சூக்குமத் தன்மை.)

(4) சத்துவா பத்தி:—சுபேச்சை விசாரணை தனுமானசி என்னும் மூன்றையும் அப்பியசித்தலால் சித்தத்தினிடத்து விஷய வாசனை அடங்குதலால் மனம் நிர்மலமாகிய ஆத்ம வஸ்துவினிடத்து நிர்விகற்ப சமாதியினால் நிலை பெற்றிருத்தல் சத்துவா பத்தியாம். (சத்துவ ஆபத்தி=ஆத்மாவின் சத்துத் தன்மையை யுணர்தல்).

(5) அசம் சத்தி:—இதுகாறும் கூறப்பட்ட நான்கு பூமிகளையும் அப்பியசிப்பதனாலும் விஷய வாசனைகளைப் போக்கும் சமாதி யப்பியாச முதிர்ச்சியின் பலனாலும் மனத்தினிடத்து திடமான பிரஹ்ம சாக்ஷாத்கார மெய்தும் நிலை அசம் சத்தியாம். (அசம் சத்தி=அசங்கத் தன்மை.)

(6) பதார்த்தா பாவனை:—இதுகாறும் கூறப்பட்ட ஐந்து பூமிகளையும் அப்பியசித்தலால் திடமான ஆத்ம நிஷ்டை யுடையவனாயிருத்தலால், தடைகளும் பாகியங்களுமாகிய பதார்த்தங்களின் பாவனை யில்லாமையின் பிறருடைய பிரயத்தனத்தினால் தேக காரியங்களை நடத்திக்கொண்டிருத்தல் பதார்த்தா பாவனையாம். (சகல வாசனைகளும் நீங்கப் பெற்றவனாய் அழுந்திய உறக்கத்தில் இருப்பவனைப் போன்று ஆத்மானந்தத்தில் அடங்கியிருத்தலாம். பதார்த்த அபாவனை=சகல பதார்த்தங்களின் பாவனை வடிவ சங்கற்ப மின்மை.)

(7) துரியம்:—ஆறு பூமிகளையும் சில காலம் அப்பியசித்த பின்னர் பர பிரயத்தினத்தா லாயினும் பேத வியவகார முண்டாகாமல் சச்சிதானந்த லக்ஷணமுடைய ஆத்மாவினிடத்தே நிலை பெற்றிருத்தல் துரிய மென்னும் ஏழாம் பூமியாகும்.

# ஆனந்த சந்திரோதயம்

S. V. V.

"கோபத்தை விட்டவன் குவலய மாள்வான்." மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் சத்வம், ராஜஸம், தாமஸம் என்னும் முக்குணங்களில் ஒன்றையோ, இரண்டையோ அல்லது மூன்றையுமோ மாறிமாறி அடையுந் தன்மையினர். இவற்றுள் ராஜஸ குணம் அதிகரிக்கும்போது கோபம் உண்டாகின்றது. கோபமானது சிறிது மேலிட்டாலும் நற்குணங்கள் நற்செய்கைகளாகிய யாவும் மறைந்து போகின்றன. தவத்தாற் சிறந்த பெரியோர்களையும் கோபம் வஞ்சித்து விடுகின்றது. கடவுளை யொத்த கருணையுடையாரையும் கோபம் எய்த்துப் பாவங்கள் செய்யுமாறு தூண்டிவிடுகின்றது. செல்வத்தாலும், தவத்தாலும் பதவியாலும் உயர்ந்தாரையும் அது தாழ்வான நிலைக்கு இறக்கி விடுகின்றது. "கோபத்தால் கௌசிகன் தவத்தைக் கொட்டினான், கோபத்தால் நகுஷனும் கோலம் மாறினான், கோபத்தால் இந்திரன் குலிசம் போக்கினான், கோபத்தால் இறந்தவர் கோடி கோடியே" என்கின்றனர் பெரியார். பல்காலும் நிதானத்தோடு முயன்ற ஒருவர் இயன்றவரையில் கோபத்தைவிட்டு, இன்னும் அதனை முற்றும் விட்டொழிக்கத் தக்க வழியில் தன்னைப் புகுத்தவல்ல சதாசாரியனைத் தேடிக் காடு மேடுகளிலெல்லாம் அலைந்து சுற்றிக் கடைசியாக இமய மலையின்கண் தவஞ்செய்துகொண் டிருந்த மகான் ஒருவரைக்கண்டு வணங்கி, அவரிடம் அடிமை பூண்டு தொண்டியற்றிக்கொண்டு வந்தார். அந்த ஞானாசாரியரும் தம்மை வந்தடைந்த சீடனுக்கு அனுதினமும் "கோபத்தை விட்டவன் குவலய மாள்வான்" என்று உபதேசித்துக் கொண்டே வந்தார். சில நாட்கள் செல்ல, குருவை அவ்விஷயத்தில் சோதிக்கவேண்டு மென்ற ஆவல் சிஷ்யனுக்குண்டாயிற்று. குருவிடம் உபதேச நிமித்தம் சென்றான் சிஷ்யன். பல விஷயங்களைக் கோவையாக எடுத்துரைத்துக்கொண்டு வரும்போதே குரு சிஷ்யனைப்பார்த்து "கோபத்தை விடாதவன் கடைத்தேறுகிறதில்லை" என்றுபதேசித்தார். சீடன் காது கேட்காதவன்போல் நடித்து "என்ன! என்ன!" என்றான். குரு ஒருமுறை இருமுறை மும்முறையும் சொன்னார். சிஷ்யன் மென்மேலும செவிடன்போல் நடித்தான். குருவுக்குக் கோபம் வந்துவிட்டது. மறுமுறை கடுகடுத்துச் சொன்னார். உடனே சிஷ்யன் பணிவுடன் "சுவாமி! தாங்களும் அதை இன்னும் விடவில்லையென்று தோன்றுகிறதே" என்றான். குருவுக்குக் கோபம் அதிகரித்தது; 'அடே! மூட்டாள்! கோபத்தின் சொரூபத்தை நீ மிகவும் கண்டறிந்தவனோ? அது எப்படி யிருக்குமடா?" என்று முறு முறுத்துக் கேட்டார் சீடனும் "அது இப்படித்தான் இருக்கும்" என்று குருவைப் பார்த்துச் சொல்லிவிட்டு அவ்விடம் விட்டகன்றான். கோபத்தை விடாதவர்களுக்கு இம்மையிலும் நன்மையில்லை. மறுமையிலும் மேன்மையில்லை. வீடு அடைவதற்கும் அவர்கள் உரியவர்களல்லர். 'கோபம்' என்னும் நோய்க்கு 'சாந்தம்—பொறுமை' என்பதே மருந்து. இந்த விஷயத்தை மிகவும் தெளிவாகவும் நன்றாகவும் ஸ்ரீதியாகராஜ ஸ்வாமிகள் "சாந்தமு

லேக சௌக்கியமு லேது'' என்ற கீர்த்தனத்தின் அனுபல்லவி சரணங்களில் உதாகரித் திருக்கின்றார்.

***

"விருப்பும் வெறுப்பும்'' ஆகிய இவையிரண்டும் கூடாதென்று பெரியோர் கூறுவர். விருப்பு கூடாதென்பது சரியே. ஆனால் வெறுப்பும் ஆகா தென்பது எதுபற்றி? "உலகத்திலுள்ள பொருள்களனைத்தும் ஈஸ்வர சங்கற்பத்தால் உண்டாகி கொஞ்சகால மிருந்து பின்பு அழிந்துபோகின்றன வாதலின், நாமேன் அந்தப் பொருள்களிடம் பிரீதியையோ அப்பிரீதியையோ கொள்ளவேண்டும்?'' என்று நம்மை நாமே ஓர் கேள்வி கேட்டுக்கொள்ள வேண்டும். இதனால் விருப்பத்தையும் வெறுப்பையும் நாம் கொள்ளவேண்டுமென்பது பெறப்படுகிறது. ஆனால் இதிலிருந்து இன்னொரு கேள்வி யுண்டாகும். அதாவது ஒரு பொருளினிடத்து விருப்பத்தையாவது வெறுப்பையாவது கொள்ளாமற்போனால் அந்தப் பொருளைப்பற்றிய கவலை நம்மை விட்டொழிகின்றது. குழந்தையிடம் நாம் பிரீதியையாவது அப்பிரீதியையாவது கொள்ளாமலிருந்தால் அக்குழந்தையை வளர்ப்பதில் நமக்குக் கவலையில்லாமற் போகுமன்றோ வெனில் இது உண்மைதான். நாம் எந்தப் பொருளைப்பற்றியும் கவலைப்படக்கூடா தென்பதே பெரியோர்களின் கருத்து. ஆனால் நம்முடைய கடமையை நாம் செய்யவேண்டியது அவசியம். இவ்விஷயம் கர்ம யோகத்தில் விதிக்கப்பட் டிருக்கிறது. செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாமல் தவிர்ப்பதும், செய்யத் தகாதவற்றைச் செய்வதும் தோஷமாகும். மனைவி மக்கள் சுற்றத்தார் முதலியோரை ரக்ஷிக்க வேண்டியது கர்மாநுசாரியின் கடமையாகும். அவன் தன் கடமையைச் செய்தே தீர வேண்டியவன். ஆனால் அபிமானத்தை மெல்லமெல்ல விடவும் வேண்டும். அவ்வாறு செய்வதற்கு நிதானமும் பொறுமையும் வேண்டும். செய்தால் சுக துக்கங்களால் துன்பத்தை யடையாமல் இருக்க வழி பிறக்கும். இதனால் மன அமைதி ஏற்படுகின்றது. மன அமைதி ஏற்படுவதால் மனிதன் ஆத்ம விசார சாதனத்தை யடைவான் என்ற கருத்துடனேயே பெரியோர்கள் இங்ஙனம் விதித்திருக்கிறார்கள். ஆதலின் அபிமானத்தை யொழிப்பது அவசியமானாலும், அது நாளாவட்டத்தில் சாதிக்கக்கூடிய விஷய மென்பதையும், வெறுப்பும் விருப்பமும் கொள்ளாமற் போனாலும் தான் செய்ய வேண்டிய கடமையைக் குறைவறச் செய்யவேண்டு மென்பதையும் புத்திமான்கள் ஊகிக்கக் கடவர்.

***

"வானுளான் காணாய் நீ மாளா வாழ்கின்றாயே.'' மெய்ஞான வழியைப் பற்றாத மானுடரைத்தடுத்து நல்வழிப்படுத்த பெரியோர்கள், "ஹே மக்களே!'' என்றழைத்து மெய்யுணர்த்துவதற்குப் பதிலாகத் தமது மனதை முன்னிலையாக நிறுத்திப் பேசுவது வழக்கம். ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் தமது,

"தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்''

என்ற பெருமை வாய்ந்த திருவாசகத்தில் "ஹே மனமே! நீ உலகில் அடைய வேண்டுவதென்று கருதி அல்லற்பட்டு ஏதேதையோ விரும்பி யலை

கின்றனையே அவையாவும் நிலையற்றவை. நீ அடைதற்குரிய பரம புருடன் வானுளன்! அவனை நீ காண்பாய்!" என்றார். "ஆனால் என் வாழ்வு பயனற்றதென்று கருதுகின்றனையா?" என்று மறுபடியும் வினவிய நெஞ்சிற்கு "ஆம்! ஆம்! நீ மாளா வாழ்கின்றாய்" என்றார். பிறகு அந்த நெஞ்சம் "நான் எப்படி வீணாக வாழ்கின்றேன். நானியற்றும் தவறுகளெவை?" என்று வினவிற்று. அப்பொழுது கூறுகின்றார். "நெஞ்சே! வசந்த காலத்திற்குரிய மன்மதனுடைய புஷ்பங்களாகிய பாணங்களின் பொருட்டாகவும், வெண்மை நிறமுள்ள பற்களையும், செந்நிறமுள்ள வாயையும் கருநிறமுள்ள குவளை மலரை யொத்த கண்களையும் உடையவர்களான மகளிர் பொருட்டாகவும் நீ துடித்து உருகுகின்றனை!" என்றார். ஆனால் நான் என்ன செய்யவேண்டும்? என்றது அம்மனம். "நாம் உள்ள இடத்திற்கு வந்து உடம்பு முழுவதும் உருகி நிற்குமாறு நம்மை அடிமை கொண்டவனாகிய சிவபெருமான் பரமாகாசத்தில் எழுந்தருளி யிருக்கின்றான்; அவனை நீ சென்று காண்பாயாக" என்று மெய்யுணர்த்துகின்றார்,



"நின்னது குற்றம் உளதோ?" மனிதர்கள் தமது குற்றத்தைத் தாம் அறிந்து இரங்கிச் சன்மார்க்கத்தைப் பற்றுகிறதில்லை, இன்ப முள்ளபோது மட்டும் தலை கால் தெரியாமல் திரிந்து, கஷ்டம் வரும்போது "பாழுந் தெய்வமே! பழிகார தெய்வமே! நினக்குக் கண்ணில்லையா?" என்று நிந்தனை புரிவர். இது அறிவிலிகளின் செய்கை, நனி முறியாத அரிசி கொண்டு சமைத்த சோறுடன் மூவகைப் பழங்கள் கூடிய ஆறுவகைப்பட்ட ருசியோடுகூடிய ஆகாரம் செவ்வையாகச் சமைத்துவைத் திருக்க, அதனை உண்ணுதற்குரிய ஒருவன் அவ்வுணவை உட்கொள்ளாமல் பசியினால் வருந்துவது சோற்றின் குற்றமாகுமோ? நெருப்பிற் காய்ச்சிப் பிறகு ஆறும்படி செய்த தெளிந்த நீரில் பாதிரிப்பூ முதலிய குடிக்கும் நீர்க்கு நறுமணம் தரும் பண்டங்களைப் போட்டு வைத்திருக்கவும், அதனைப் பருகுதற்கு உரிய ஒருவன் பருகாமல் தணியாத தாக விடாயால் தவிப்பது தெளிந்த அத் தண்ணீரின் குற்றமாகுமோ? விசாலமாய்த் தேன் துளிகளைச் சிந்தி பூங்கொத்துகள் நிரம்பி மணம் நிரம்பிய சோலை யிருக்கவும், நல்ல வெயிலில் அச்சோலை நிழலில் தங்கி இளைப்பாறக்கூடியதா யிருக்கவும் அங்ஙனம் செய்யாமல் தெள்ளிய மணல் நிறைந்த நிழலற்ற பாலைவனத்தில் தகிக்கின்ற வெயிலில் நின்று தவிப்பது சோலையின் குற்றமாகுமோ? ஆகையால் எமது தலைவனான சிவபெருமானே! குற்றம் உன்னுடைய தல்ல. பாவிகளுடையதே. ஆன்மாக்கள் தாம் இறைவனைத் தம் மனத்திலிருத்தி அவனது திருவடிகளைத் தியானித்து கடமையைச் செய்துவந்தால், உலகத்தில் உழல்வதற்குக் காரணமான தீவினைகள் யாவும் நெருப்பிடைப்பட்ட பஞ்சுபோல் அழிந்துபோக, இயமனையும் பிறப்பு இறப்புக்களையும் தம்மிடம் அணுக வொட்டாது செய்தற்கேற்ற வல்லமையை எளிதிற் பெறலாம். அங்ஙன மிருக்கவும் இறைவனைத் தியானியாமலிருப்பது இவ்வான்மாக்களின் தீவினையேயன்றி, ஒன்றிலும் பற்றில்லாது தன்னுடைய சன்னிதான மாத்திரத்தால் உலகத்தைக் காரியப்படுத்தும் இறைவன்மீது குற்றங்கூற வழியில்லை யன்றோ! ஆதலின், அவனது சாரணாரவிந்தங்களை விடாமல் பற்றிக்கொண்டு மாந்தர் நல்வழிப்படக் கடவர் என்கிறார் பட்டினத்தடிகள்.

# மாணவர்களுக்கு நல்லுரை.



— டர்பன் சரஸ்வதி சபைத் தலைவர் —
(ஸ்ரீ ச. முனிஸ்வாமி பிள்ளை எழுதியது.)

கடவுளைத் தொழுது காலையி லெழுந்திரு
காலையி லெழுந்துன் வேலையில் நில்லு
வேலையிற் சோம்பலை விட்டு நீ முயலு
முயலும் வேலையை முடித்திடப் பழகு
சுத்த நீரிலே நித்தமுமுழுகு
தூய ஆடையை நேயமா யுடுத்து
நல்ல உணவையே நாடி நீ யுண்ணு
தீய உணவை நோயென விலக்கு
நல்லவுருறவை நயத்து நீ கொள்ளு
தீயவ ருறவைச் சிந்தித் திடாதே
குருமொழி கொண்டு பெருமகிழ் வோடிரு
குருவழிபாடு குறைவறச் செலுத்து
வித்தை விரும்பி நித்தமு மோது
ஓதுவ திந்தப் போதெனக் கொள்ளு
கொண்டவப் பொழுதில் குறைவற வோது
ஓதியுணர்ந்துநீ உணர்ந்தவா றொழுகு
எல்லோரிடத்தும் இனிமையாய்ப் பேசு
இயன்ற வரையில் எளியவர்க் குதவு
வைதிடுவோரையும் வாழ்த்தப் பழகு
வாழ்த்தக் கேட்கின் தாழ்த்திக்கொள்ளு
பெற்றவர் தம்மைப் பெருமைப் படுத்து
கற்றவர் தம்மைக் கண்ணியப் படுத்து
நல்லவழியில் நாளைச் செலவழி
நாதனைத் தொழுதுமுற் போதினு லுறங்கு
இன்ன நிலையி லிருக்கப் பழகின்
இனிய வாழ்வு தனையடை வாயே.





## உலக ஞானம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

அரசனே! கலியுகத்துக்கு வருஷம் நாலு இலட்சத்து முப்பத்திரா யிரம். இதில் நாலாவது பாகம் மிகக்கொடியது. அதைப்பற்றித்தான் இப்பொழுது நான் சொன்னது. முதல் முக்கால் பாகமாகிய மூன்று இலட்சமும் கொடியதே யாயினும் அடிக்கடி அவதார புருஷர்கள் தோன்றி உலகத்தைத் திருத்தி நன்னெறி காட்டுவார்கள்; ஆகையால் வைதிக நெறி முற்றும் மாறுபடாமலே இருக்கும். இருந்தாலும் தர்மம் நிலைதடுமாறிக் கொண்டே வரும். நெறிதவறாத வேந்தர்களும் தோன்றி தரும பரிபாலனம் புரிவார்கள். அதனால் தருமங்கள் தலை யெடுக்கிறதும் தலை இறங்குகிறதுமாகவே இருக்கும். சதாசாரம் குறைந்துகொண்டுதா னிருக்கும். கடைசி பாகத்தில் அண்ணனுக்குத் தம்பியும், பிதாவுக்குப் புத்திரனும், புருஷனுக்கு மனைவியும், எஜமானுக்குச் சேவகனும் பகிரங்கமாகத் துரோகம் செய்வார்கள். அந்தக் காலத்தில்தான் மறையவர்க்குப் பெரிய ஆபத்து நேரும். அவர்கள் மலைகளிலும் வனங்களிலும் ஒளிந்துகொண்டு அன்னம் தண்ணீர் கூடக் கிட்டாமல் தெய்வத்தைச் சிந்தித்துக் கதறிப் புலம்புவார்கள். அப்பொழுதுதான் கல்கி உதிப்பார். அவர் பாவிகளைச் சங்கரித்துப் புதிய தான கிருதயுகத்தை உற்பத்தி யாக்குவார். அரசனே! அரசனாலேயே நல்ல யுகங்களும் கெட்ட யுகங்களும் உண்டாகின்றன. நீர் நீதிதவறாமலிருந்து உலகத்தைப் பரிபாலனம் செய்யும். அரசனாலே ஜகம் காக்கப்படுகிறது. பிரஜைகள் சுகப்படுகிறார்கள். இது விஷயமாய் நான் சொல்வதைக் கேளும்.

வைனியன் என்ற ஒரு இராஜரிஷி அசுவமேத யாகம் செய்துகொண்டிருந்தார். அந்தக் காலத்தில் அத்திரி என்ற ஒரு பிராமணன் உலகத்தை வெறுத்துக் காட்டுக்குப்போய்த் தவம் புரியக்கருதித் தமது கருத்தைத் தமது பத்தினிக்குக் கூறி உன் கருத்தென்னவென்றார். அவள் நீர் சொன்னதே சரி, நானும்கூட வருகிறேன், அசுவமேதயாகம் செய்கிற வைனிய ராஜனிடம் போய்ப் பொருளை யாசியும், அவ்வசரன் நீர் விரும்பியபடி பெரும் பொருள் கொடுப்பான், அதை நமது பிள்ளைகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு நாம் வனத்துக்கு போகலாமென்றாள். முனிவர், "பெண்ணே! அவ்வரசன் சபையில் எனக்கு விரோதிகள் பலரிருக்கிறார்கள். ஆயினும் உனக்காக நான் போகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டுப்

போய், "அரசனே! நிச்சயமாகவே நீர் பாக்கியவந்தர்; நீர் சகல பிராணிகளுக்கும் இறைவர்; முனிவர்கள் உம்மை வந்தனம் செய்கிறார்கள். உமக்கு மேற்பட்டவர்களில்லை" என்று சொன்னார்.

இதைக்கேட்ட கௌதமர் என்ற ரிஷி கோபம் கொண்டு, "அத்திரி முனிவரே! இப்படிப்பட்ட மூடத்தனமான வசனங்களை மறுபடியும் பேசாதேயும். மஹேந்திரனே எல்லாப் பிராணிகளுக்கும் இறைவன். அவனே எல்லா அரசர்களுக்கும் மேலான அரசன்" என்றார். அத்திரி "இந்த அரசனும் தேவேந்திரனைப் போலவே நமக்குப் பாக்கியத்தை நியமிக்கிறார். நீர் அறியாமையால் மயங்கிப் பேசுகிறீர்" என்றார். கௌதமர், "அத்திரி முனிவரே! நீர் தப்பாகப் பேசுகிறீர். பொருள் சம்பாதிப்பதற்காக வீணாக அரசனைப் புகழ்ந்துபேசுகிறீர். செய்யத்தக்க மேலான கருமம் இன்னதென்று உமக்குத் தெரியாது. உமக்கு நல்லறிவில்லாமையால் மயங்கிப் பேசுகிறீர்" என்றார். கௌதமர் "நான் அறியாதவனல்ல. இவ்விஷயத்தில் நீர்தான் தப்பு அபிப்பிராய முள்ளவராயிருக்கிறீர். அரசனுடைய தயவைச் சம்பாதிப்பதற்காக அவனை வீணாகப் புகழ்ந்து பேசுகிறீர். உமக்கு வயது மட்டும் ஆயிற்று; மரம்போல வளர்ந்து இருக்கிறீர்" என்றார். இச்சச்சரவைக் கேட்டு யாகம்செய்யும் முனிவர்கள், "அவ்விருவரும் ஏன் வழக்கிடுகிறார்கள்? இந்த ராஜசபையில் அவர்களை யார் விட்டது?" என்றார்கள். சர்வக்ஞராகிய காசியபர் அவர்களிடம் வந்து நீங்கள் எதைக்குறித்துத் தர்க்கம் பண்ணுகிறீர்கள்? என்று கேட்டார். அதற்கு கௌதமர் "இந்த அத்திரி முனிவர் வைனியன் என்பவன் எங்களுடைய அதிர்ஷ்டத்துக்கும் அரசனா யிருக்கிறான்" என்று சொல்லுகிறார் என்றார். காசியபர் ஸனத் குமார முனிவரை அழைத்து அவர்களுடைய வழக்கைத் தீர்க்கும்படி சொல்லிப் போய்விட்டார்.

தெய்வத் தன்மையுள்ள சனத்குமாரர் அவர்களை நோக்கி உண்மையான வசனங்களைச் சொல்லுகிறார். "நெருப்பானது காற்றுடன் சேர்ந்தபோது காட்டை யெரிக்கின்றது. பிராமண தேஜஸ் க்ஷத்திரிய தேஜஸுடன் கூடினால் சத்துருக்களை தகிக்கின்றது. அரசன் வைதிகநெறியை ஸ்தாபிப்பதில் பிரசித்தி யடைந்திருக்கிறான். தன்குடிகளைக் காப்பாற்றுகிறான். அதனால் அவன் எல்லாப் பிராணிகளையும் காப்பாற்றுகிற இந்திரனை யொப்பா யிருக்கிறான். நீதியைப் போதிப்பதினால் சுக்கிரனை ஒத்திருக்கிறான். புத்தி கூறுவதினால் பிருகஸ்பதியை ஒத்திருக்கிறான். ஆகையால் அரசன் நமது அதிர்ஷ்டத்தை ஆளுகிறான். எல்லா மனிதராலும் வணங்கப்படும் எல்லாருக்கும் மேலானவனா யிருப்பதினாலே பிரஜாபதி, விராட், ஸ்வராட், பூபதி முதலியவர்களாலே புகழப்படுகிறான். சகலருக்கும் விதிகளைக் கற்பிக்கிறதினாலும், யுத்தத்தில் வெற்றி கொள்வதினாலும், சமாதானத்தை உண்டாக்குவதினாலும், உலகத்தைப் பரிபாலிப்பதினாலும், தன் பிரஜைகளைச் சொர்க்கத்துக்குச் செலுத்துகிறதினாலும் விஷ்ணுவை ஒப்பாகிறான். கோபத்தினாலும், யுத்தத்தில் வெற்றி கொள்வதினாலும், உண்மை நெறியை நிலைநிறுத்துகிறான். ரிஷிகள்கூட ராஜனுக்குப் பயந்தே பாவம் செய்யாம லிருக்கிறார்கள். தேவர்களுக்குள் சிறந்த சூரியன் தன்னுடைய கிரணங்களினாலே உலகிற் பரந்த இருட்டை அழிக்கிறதுபோல மனிதனுட் சிறந்த அரசன் உலகிலுண்டாகும் பாவங்களை அழிக்கிறான். சாஸ்திரப் பிரமாணங்களினாலே அரசனுடைய மகிமை நிலை நிறுத்தப்படுகிறபடியால், அரசனுக்குச் சார்பாகப் பேசினவர் பட்சத்தை நான் அங்கீகரித்துப் பேசுகிறேன்" என்றார்.

இதைக்கேட்ட நல்ல மனமுள்ள அரசன் மகிழ்ந்து இராஜ மேன்மையாகப்பேசி வெற்றி கொண்ட பட்சத்தைச் சார்ந்து களிப்புடன் சொல்கிறான், "பிராமண ரிஷியே! நீர் என்னைப் பெரியவன் என்றும், மனிதர்களுக்குள் சிறந்தவனென்றும் நிலை நிறுத்திய படியாலும், என்னைத் தேவனுக்குச் சமானமாகக் கூறினபடியாலும், உமக்குப் பலவகையான திரண்ட ஐசுவரியத்தைக் கொடுக்கிறேன். நல்ல ஆடை ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஆயிரம் பணிவிடைப் பெண்களையும், பத்து இலட்சம் தங்க நாணயங்களையும், பத்துப் பாரம் தங்கமும் கொடுக்கிறேன். நீர் எல்லா விஷயங்களிலும் தேர்ச்சி யடைந்தவ ரென்று நம்புகிறேன்" என்று கூறி அவரைச் சன்மானித்தான். மகிமையுள்ள அத்திரி முனிவர் அரசனால் இப்படிப் பெருமைப்படுத்தப்பட்டார். அவர் அரசன் கொடுத்தவைகளைப் பெற்றுக் கொண்டு வீடுபோய்ச் சேர்ந்து தம்முடைய புத்திரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விட்டுத் தவம்புரியும் விருப்பத்துடன் வனத்துக்குப் போய்விட்டார்.

"அரசனே! கேட்டீரா? நெறி தவறாமலிருந்து பிரஜைகளுக்கு நன்மை செய்வதினால் சூரியன், இந்திரனுதி தேவர்களையும் மஹா விஷ்ணுவையும் ஒப்பாகிறு" னென்று ஸனத் குமார முனிவர் சாஸ்திரப் பிரமாணங்களால் நிறுத்தினர். நெறிதவறின அரசனை உலகத்தார் மதிக்க மாட்டார்கள். அவனுக்குப் பூலோகத்தில் இகழ்ச்சியும் அவமானமுமே யுண்டாகும். அதனால் அவன் மறுமையிலும் நல்ல கதியையும் அடையமாட்டா னென்று நூல்கள் கூறுகின்றன. பெரியோர்களும் அப்படியே அபிப்பிராயப்படுகிறார்கள். நான் உம்மிடத்தில் அதிகப் பிரியமுள்ளவனானகையால் உண்மையைக் கூறினேன். இவை யெல்லாம் மனு முதலியவர்களால் அங்கீகரிக்கப் பட்டவை. பாண்டவர்களை அழைத்து அவர்களையும் பரிபாலியும்.

திருதராஷ்டிராஜன் "விதுரா? எனக்கும் அப்படித்தான் விருப்பமிருக்கிறது. ஆயினும் விதி வலிது. இப்பொழுது மனுவென்று கூறினையே இப்பொழுதிருக்கும் வைவசுவத மனு என்பவர் யார்? அவர் எப்படி இந்தப் பதவியைப் பெற்றார்? அதை விளங்கச்சொல்" என்றார்.

விதுரர், "மகிமையுள்ள ஒரு பெரிய ரிஷியிருந்தார். அவர் வைவசுவதன் என்ற ரிஷியின் புத்திரர்; பலத்தாலும், பராக்கிரமத்தாலும், தவசாலும் மிகச் சிறந்தவர். அவர் பதரிகாசிரமத்தில் ஒரு காலால் நின்றுகொண்டும், இருகரங்களையும் மேலே தூக்கிக்கொண்டும் உக்கிரமான தவசு புரிந்தார். இரண்டு கண்களையும் மூடாமல் அண்ணாந்து பார்த்துக்கொண்டு பதினைந்து வருஷம் கடுந்தவம் புரிந்தார். அவர் ஒரு காலத்தில் சடைமுடி தரித்துக் கொண்டு அருவியின் கரையில் தவசு செய்தார். அப்போது ஒரு மீன்வந்து அவரைப்பார்த்துச் சொல்லுகிறது, "மகிமை யுள்ளவரே! நான் ஆதர வற்ற ஒரு சிறிய மீன். பெரிய மீன்களுக்குப் பயப்படுகிறேன். பெரிய ரிஷியே நீர் என்னைக் காப்பாற்றவேண்டும். சின்ன மீன்கள் பெரிய மீன்களுக்கு ஆகாரமாகிற கெட்டவழக்கம் எங்கள் ஜாதியிலிருக்கிறது. ஆகையால் இந்தப் பயங்கரமான சமுத்திரத்தில் நான் முழுகிப் போகாதபடி என்னைக் காப்பாற்றும், நீர் செய்கிற உபகாரத்துக்கு நான் பதில் உபகாரம் செய்வேன்" என்றது.

(வரும்)

# மதுபான விலக்கு

(A. முத்துக்கிருஷ்ணன்.)

நாகரிகத்தைக் கெடுத்துப் பெருங்கேட்டை விளைவிப்பது மதுபானம். மதுபானம் மனித சுபாவத்தையே கெடுத்து, மிருக குணம் உண்டாக்கிவிடுகிறது. மதுவானது இயல்பிலேயே விஷம்போன்றது. இதை நன்ருகப் பரீக்ஷித்துப் பார்க்கின் பாஷாணம் என்பதும் இதுவே எனச் சொல்லலாம். சாராயம், கள், பிராந்தி, விஸ்கி முதலிய வஸ்துக்களே மதுவெனப்படுகின்றது. வெறிதருவதும், வெறிதராததுமான இரண்டுவகைப் பானங்களில் இவை வெறிதரும் வகுப்பைச் சார்ந்தவை. இவ்விதமாக, "வெறியுள்ளவை" என்னும் தமிழ்ப்பதத்திற்கு இண்டாக்ஸிகெண்ட்ஸ் (Intoxicants) என்ற ஆங்கிலமொழி பிரயோகிக்கப்பட்டு வருகிறது. இண்டாக்ஸிகெண்ட் என்னும் இந்த மொழி ஆதியில் டாக்ஸிகன் "Toxicon" என்னும் க்ரீக் வார்த்தையினின்று உற்பத்தியானது. இப்பதத்திற்கே அப்பாஷையில் பாஷாணம் என்றுதான் பொருள் என்பது கற்றறிந்தோரது துணிபு. இதிலிருந்து சாப்பிட்டவுடன் (இலாகிரியை) வெறியைத் தரக்கூடிய வஸ்துக்கள் எத்துணை உள்ளனவோ, அத்துணையும் பாஷாணமென்றே கொள்ளலாம். இதுவே நன்குகற்றுணர்ந்த வைத்திய நூலுடையார் துணிபுமாகும்.

ஆனல் மூன் சொல்லியபடி பாஷாணத்தினும் மதுபானம் கொடியது. பாஷாணமானது அதனை உண்டவரை மாத்திரம் உபாதிக்கின்றது. மதுவோ அதனை உண்டவருடன், உற்றார், பெற்றார் மற்றுஞ் சகலரையும் உபாதிக்கின்றது. பாஷாணம் ஒரு சமயம் இம்மை இன்பத்தைமட்டும் போக்குவதாகும். மதுபானமோ மறுமை இன்பத்தையுங்கூடப் போக்கக்கூடியதாயிருக்கிறது. பாஷாணம் அருந்தினரைப் பிறிதோர் மருந்தின் மூலம் மீட்டுக்கொள்ளலாகும். மது அருந்தினரையோ அம் மது மயக்கம் தானாய் நீங்கினலொழிய, மற்ருேர் மருந்தினல் மீட்கமுடியாமல் போய்விடுகிறது. பாஷாணம் உட்கொண்டவரை மானிடவகுப்பிற் சேர்த்துக்கொள்ளலாம். மது உட்கொண்டாரையோ அந்தோ! விலங்குகள் வகுப்பிலேயும் சேர்த்துக்கொள்ள வழியில்லையே. பாஷாணம் புசித்தோரை நித்திரை செய்வாரோடொப்பிடலாம். மதுபானம் செய்தவரையோ செத்தவருக்கே ஒப்பிடலாம். இதை நன்குவிளக்கும் பொருட்டுத் தான், "துஞ்சினர் செத்தாரின் வேறல்லரெஞ்ஞான்றும், நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" என்னும் மொழியானது பிரகாசித்துக்கொண்டிருக்கிறது.

இம்மாதிரி வெறியைத் தரக்கூடிய மதுசாரத்தையுடைய பானங்களில் மேனுட்டுப் பானங்களாகிய, பீர், வொயின், ஸ்பிரிட், பிராந்தி, விஸ்கி முதலியவைகளோடு நம்நாட்டுப் பானங்களாகிய, பனங் கள் தென்னங் கள் முதலிய

வைகளும் தலையெடுத்து நின்றுலாவுகின்றன. மேனாட்டுப் பானங்களுக்கு, அதனதன் சக்திக்குத்தக்கவாறு, மதுசாரம் செயற்கையாய்ச் சேர்க்கப்பட்டிருக்கிறது. கள்ளோவெனில் இயற்கையிலேயே மதுசாரத்தோடு கூடி உண்டானது.

நாம் உண்ணும் ஆகாரம் ஒவ்வொன்றும், மாறுதலடைந்துடலைப் போஷிக்கின்றது. ஆனால் மதுசாரத்திற்கு மாறுதலடையும் குணமின்மையால் அது உடலை வளர்க்கின்றதென்பதற்கும் போதிய நியாயமில்லை. ஆனாலும் அஃதறவே நமது ரத்தத்துடன் கலந்துவிடுகிற துண்மைதான். அப்படிக் கலப்பதால் நமக்கது ஒரு நன்மையுஞ் செய்கிறதில்லை. செய்கிறதில்லை யென்பதுமட்டுமோ--இம் மது இரத்தத்தின் சத்தையே குறைக்கிறது. ரத்த ஓட்டத்தைக் குறைக்கிறது. ஜீரணக் கருவிகளைத் தளரவைக்கிறது. கடைசியாக ரத்தத்தையே ஒன்றுக்கு முதவாமல் நீற்றுப்போகப் பண்ணுகிறது. இக்காரணத்தினால்தான், மதுபானம் செய்யாதவர்களுக்கு ஏதாவது ஒரு சமயத்தில், காயம் ஏற்பட்டால் அது சீக்கிரம் குணமடைகிறது. மதுபானிகளுக்குக் காயம் ஏற்பட்டால் அக்காயம் குணமடைய வெகுநாளாவதுடன் இறுதியில் அன்னார் மரணத்திற்கே அப்புண்கள் ஏதுவாயுமிருக்கின்றன.

இம்மாதிரி இருக்கச் சிலர் மதுபானம் உடம்புக்கு ஒருவித உஷ்ணத்தைப் பிறப்பிக்கின்றது என்று வாய்கூசாமல் சொல்லுகின்றனர். இது மிகவும் தவறான அபிப்பிராயம். "உள்ளதும் போயிற்று நொள்ளைக்கண்ணா" என்ற பழமொழிக்கொப்பத் தேகத்தில் இயல்பாகவுள்ள உஷ்ணத்தையுங் கூட அளவுக்குமிஞ்சியே தணித்து விடுகின்றதென்பதற்குச் சந்தேகமே இல்லை. இதற்குச் சாக்ஷியாகப் பிரஞ்சு நாட்டின் சக்கரவர்த்தியான முதல் நெபோலியன் சென்ற 1812-ம் ஆு ருஷிய தேசத்தை நோக்கிப் படையெடுத்துப் போனதை வாசித்திருப்பீர்கள். அப்போது அந்தப் பெரியசேனை நடக்கமுடியாமல், தள்ளாடியும், சிலர் மாண்டும், பிரான்ஸுக்குப் பலத்த நஷ்டத்தை யுண்டாக்கியது. இந்த நஷ்டத்திற்குக் காரணம் ருஷியர்கள் இவர்களை அடித்துவிரட்டியதல்ல. பிரஞ்சுக்காரர் தாங்களாகவே ஓட்டம் பிடித்துவிட்டனர். இவர்கள், குளிர் தாங்கமுடியாமையாலேயே மாண்டனர். பிரஞ்சுக்காரர்களுக்கு உண்டான குளிர் ருஷியர்களுக்கு இல்லையோவெனின், ருஷியர்கள் குளிரைச் சகிக்கும் ஆற்றலுடையவர்களா யிருந்தார்கள். பிரஞ்சுக்காரர்களால் குளிரைத் தாங்கமுடியவில்லை. இதற்குக் காரணம் அவர்களில் பெரும்பாலார் மதுபானிகளாக இருந்ததே. இஃது சரித்திர ஆசிரியர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம்.

மேலும் 1870-71-ம் ஆு நடந்த பிரான்ஸ் ஜர்மானிய யுத்தத்தின் போது பிரான்ஸ் முறியடிக்கப்பட்டதற்கும் இவர்கள் குடியர்களா யிருந்ததே

காரணம். இது அக்ககூஷியில் உதவி செய்துகொண்டிருந்த வைத்தியாது மொழிகளிலிருந்து நன்கு விளங்கும். ஆதலால் குளிருக்காக மதுபானம் என்ற சமாதானம் பொருந்தாது.

இம் மதுபானமானது எக்காரணத்தைக் கொண்டும் ஆகாரத்தில் ஒன்றல்ல. இது ரத்தத்துள் கலந்து ஓட்டத்தைக் குறைத்து, பனையேறிவிழுந்தவனைக் கடாவேறித் துவைத்ததைப்போல் செய்துவிடுகிறது. தவிர இதை உபயோகித்தால், ஏற்கனவே தக்க அளவோடு நடந்துகொண்டிருக்கும் நம் ஹிருதய கமலத்தை 'பாகனில்லாத குதிரையைப்போல்' முறைதவறி வரம்பு கடந்து நடக்கச்செய்து, அதை மிகவும் மயங்கவும் தயங்கவும் செய்கிறது. மதுபானிகள் இருதயத்தின் வெப்பமானது உடனுக்குடன் வெளியேறி அகால மரணங்களுக்குள்ளாகிறார்கள். மதுவை நிறையக்குடித்து பனியில் படுத்திருந்தமையால் காலையில் இறந்து கிடந்திருக்கும் மனிதனே இதற்குச் சாட்சியாவான். இது அநுபவத்தில் காணத்தக்கதே. இப்படியிருக்கச் சிலர் இது களைப்பைப் போக்குகிற தென்கின்றனர். இம்மாதிரி அவர்கள் மதியீனமாகச் சொல்வதற்கு மதுபானம் மெய்யுணர்வையே கெடுக்கிற தென்பதே காரணம். ஒருவனுக்கு மெய்யுணர்வே இல்லாவிடின் அவனுக்குணர்ச்சிதா னேது? வலிதா னேது?

பூர்வம், ராமர் சுக்ரீவனுக்குச் சத்துருவாகிய வாலி என்பவனைக் கொன்று சுக்ரீவனென்பவனைக் காப்பாற்றினா ரன்றோ? அக்காரணத்தின் பொருட்டு ராமர், சுக்ரீவனுக்கு ஆபத்நேச ரல்லவா? அப்பேர்ப்பட்ட ஆபத்நேசராகிய ராமர் ஓர் சமயம் சுக்ரீவனிடத்திற் போயிருந்தார். அச்சமயம் சுக்ரீவனென்னும் வானரன், கட்குடி மயக்கத்தில் ஆழ்ந்திருந்ததால், சிநேகிதர் வந்தது தெரியாமற் போய்விட்டது. அவருக்குத்தான் தெரியாவிடினும் யாராவது தட்டி எழுப்பியும் எழுந்து பேசக்கூடாதா? யார் என்ன சொல்லியும் அசையவில்லை. பிறகு மது மயக்கம் வெகுநேரங் கழித்துத் தானாய்த் தெளிந்த பிறகு எழுந்து பார்த்தார். நடந்த சமாசாரம் பூராவையும் அங்குள்ளோரால் தெரியப்பெற்றார். பிறகு அவரே அதை யோசித்துக் கட்குடியால் நம்மருமை நண்பர் வந்ததும் தெரியாமற் போய்விட்டதே என்று விசனப்பட்டு,

"வஞ்சமுங் களவும்பொய்யு மயக்கமு மரபில் கொட்புந்
தஞ்சமென் றுரைநீக்கும் தன்மையும் களிப்புந் தாக்குங்
கஞ்சமெல் லணங்குந்தீருங் கள்ளினை லருந்தி னாரை
நஞ்சமுங் கொல்வதல்லா னரகினை நல்கா தன்றே."

என்று சொன்னது மல்லாமல் அன்றுடன் கட் குடிப்பதை விட்டுவிட்டனரன்றோ?

நிற்க, மதுபானமானது உடம்பையே வரண்டு போகும்படி செய்து விடுகிறது. கள்ளுக்கு அச் சக்தி யிருப்பதை ஒரு உதாரணத்தால்

நன்கு விளக்கலாம். அதாவது ஒரு வாழைப்பழத்தை உரித்துக் கொஞ்சநேரம் கள்ளில் போட்டு வைத்திருந்தால், சில நிமிஷங்களுக்குப் பிறகு பழத்திலுள்ள ரஸமெல்லாம் வற்றிச் சுக்குப்போ லாகிவிடுகிறது. இக் காரணத்திஞல்தான் மதுபானிகள் மதுவைக் குடிக்கக் குடிக்க நாவரண்டு அதிகமான மதுவைக் குடிக்கின்றனர். இல்லாவிடில் இரண்டு டம்ளர் ஜலம் குடிக்க முடியாதவர்கள் ஒரு வள்ளம் (பட்டணம் படி 2) கள்ளை எப்படி அருந்துவார்கள்? அந்தோ பாவம்! இப்படி இவர்கள் குடிப்பதால் தங்கள் கையிலுள்ள காசையெல்லாம் தீர்த்துவிட்டுப் பாடுபடுவதற்கும் முடியாமல் கடன் வாங்கிப் பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றவேண்டி யிருக்கிறது. இவர் களை நம்பி இரண்டாவது தடவை யாரும் கடனும் கொடுப்பதில்லை. என்ன செய்வார்கள் பாவம்? கோபத்தால் யாவரையும் அடிக்கிறார்கள். பரிதாபம்! தாம் கெடுவதல்லாமல் குடும்பமே சீர்குலைய நேரிடுகிறது.

மதுவானது இவ்வித கெடுதிகளை உண்டாக்குவதால், வைத்தியர்கள், வீரம், பூரம், வெள்ளைப் பாஷாணம், அபின், இரஸம், புருவிக் திராவகம், முதலிய பாஷாணங்களை எப்படி உபயோகிக்கிறார்களோ, அம்மாதிரியே இப் பானத்தையும் உபயோகப்படுத்தச் சொல்லுகிறார்கள். அதிலும், மேற் சொன்ன பாஷாணங்களை யெல்லாம் உபயோகித்தும் தீராவிட்டால்தான் இதை உபயோகிக்க வேண்டுமெனச் சொல்கின்றனர் வைத்தியநூ லுடை யார். "மதுபானம் ஆகாதெனச் சொல்கிறீர்களே? எதுக்காகக் கடவுள் மது வைப் படைத்திருக்கிறார்?" என்று கேட்கும் அறிவீனர்களுக்கு இதுவே தகுந்த விடையாகும்.

இத்தகைய நியாயங்கள் கொத்துக் கொத்தா யிருப்பதால் "அளவுக்கு மிஞ்சினுல் அமுதமும் விஷம்" என்னும் சொல்லை ஆதாரமாய் வைத்துக் கொண்டு எதுவும் அளவு கடந்து உபயோகிப்பதே கெடுதியாகும், நாங்களோ அவ்வாறில்லை என்று சிலர் தாங்கள் சொல்லுகிற வண்ணம் சிற்றளவாய் மதுவை உபயோகித்து வருகின்றனர். இம்மாதிரி, மித மதுபானிகள் என்று ஓர் நாமம் சூட்டிக் கொள்வதால் ஒருபயனு மில்லை. மிதம் என்கிற சொல் லுக்கு அளவுவேண்டும். ஒருவர் காட்டுகிற அளவு மற்றொருவருக்கு ஒப்பா யிராது. ஒப்பித்தான் தீரவேண்டுமென்பது ராஜ விதியுமன்று, வேத விதியு மன்று. ஒருவனுக்கு ஆழாக்குக் கொண்டது மிதமா யிருக்கும். மற்றொருவ னுக்குப் படிகொண்டது மிதமா யிருக்கும். சிலருக்குக் குடங்கொண்டது மிதமா யிருக்கும். இருக்கட்டும், இப்பொழுது பெரு மதுபானிகளா யிருப் பவர்களெல்லாம், இரண்டொரு வருஷங்களுக்கு முன்னே மித மதுபானிக ளாக இருந்தவர்கள் தானே. எத்தனைபேர் தங்கள் மனைவி மக்களுக்கும் தெரிய லாகாதென்று ஏலம், கிராம்பு முதலியவைகளை வாயிற் போட்டுக் கொண்டு மினுக்கின மித மதுபானிகளா யிருந்தார்கள். மது, தன்னைக் குடிக்கக் குடிக்க நாவை வரட்சி செய்து தாகத்தை யுண்டுபண்ணும் சக்தி

யுடையதா யிருப்பதால், மித மதுபானிகளாக விருந்து சீக்கிரம் பெரு மது பானிகளாகி விடுகின்றனர்.

ஆகையால் இவ்விதமான குதர்க்கமான குணங்களையும், அபிப்பிராயங்களையும், கனவிலும் நினையாமல், அதனால் உண்டாகும் கெடுதிகளையும், தன்னுவதால் உண்டாகும் நன்மைகளையும், தீரயோசனை செய்து அறவே இதை ஒழித்து நன்மையடைய வேண்டும். பழகும்போது எப்படிக் கொஞ்சங் கொஞ்சமாகப் பழகினர்களோ அம்மாதிரியே கொஞ்சங் கொஞ்சமாகத் தவிர்க்கக் கூடாதா? ஆனால் முழுமையும் திடீரென்று தள்ளினாலும் ஒரு கெடுதியும் உண்டாகாது.

இதையெல்லாம் நன்கு யோசித்து ஜனங்களைச் சுகம் பெறும்படி, செய்வது "ஆங்கில ஆட்சியில் ஆதவன் அஸ்தமிப்பதில்லை," என்று ஆட்சிக் கொடியை நாட்டிய நம் ஆங்கிலர் கடமையாம். இவர்கள் எங்கேயும் மதுக் கடைகளை வைக்கக்கூடாதென்றும், அப்படிச் செய்பவர்களை ஆக்கினையிட்டும் வரின், இவ்வித கெடுதிகள் ஒருபோதும் விளையா.

இம்மாதிரி கடவுளருளால் உண்டாயின் நம் பிரதிய நாடு எந்நாட்டினும் மேனாடாய் விளங்குவதுடன், எந்நாட்டிற்கும் பொன்னாடாய் விளங்குமென்பது திண்ணம்.

## குழந்தைகளும்-விளக்கெண்ணெயும்.

விளக்கெண்ணெய் குடிக்கும் விஷயத்தில் குழந்தைகள் படும் பாட்டைச் சொல்லி முடியாது; "அம்மா வயிற்றில் பிறக்கவும் வேண்டாம்! இந்த ஆமணக்கு எண்ணெயைக் குடிக்கவும் வேண்டாம்!" என்று ஒரு வசனம் உலவுகின்றது. குழந்தைகள் எண்ணெய் குடிக்க மறுக்கும் கோபமும், பலாத்காரமாய் உட்காரவைத்து வாயில் நாற்றமுள்ள எண்ணெயை ஊற்றி மூக்கை அடைத்துவிடும்பொழுது அக்குழந்தை பட்டாடையில் வேகமாய்த் துப்பிய கோபமும் கலந்து தாய்களுக்கு எரிச்சல் கிளப்பி குழந்தைகளை அடிக்கவும் செய்கின்றனர். இக்கஷ்டத்திற்கு ஓர் பரிகாரம் உண்டு. அதாவது கொடுக்கவேண்டிய எண்ணெயைக் கால்பங்கு பாலோடு பொங்கவைத்து லவங்கப்பட்டைக் கஷாயம் கொஞ்சம் சேர்த்துவிட்டால் இனிமைபெற்றுவிடும்; குழந்தைகள் எனக்கு, எனக்கு என ஆசையுடன் குடிக்கும். விளக்கெண்ணெயால் ஏற்படக்கூடிய சகலவிதமான அனுகூலங்களும் கிடைத்துவிடும்.

ச. முனிஸ்வாமி பிள்ளை, டர்பன்.

ஆசிரியர் சீடனுக்கு

# உபதேசிக்கும் முறைமை.

தமிழ்ப்பண்டிதர்-ஆ. கமலநாத முதலியார்.

(98-ம் பக்கத் தொடர்ச்சி)

இதுவே பொய்யாயிருக்கிற நாமரூபப் பிரபஞ்சத்தை அபக்குவிகளுக்கு அனந்தகோடி பேதமாயுள்ள வெவ்வேறு உருவினதாகத் தோற்றுவிக்கும். இச்சச்சிதானந்த அறிவுதானே என்றும் உள்ளபொருள்.

ஒப்பற்ற நமது சச்சிதானந்த சொரூபமே இருந்து விளங்கி ஆனந்திப்பது. நாமரூபமோவெனில் தோற்றமாத்திரமே யல்லாமல் நினைத்துப்பார்க்குமிடத்திலே வேறேயின்றாம்.

அனுதிகாலமே இந்தச் சுவானுபூதியாகும். (இங்ஙனமிருக்க) நானுவிதமாகத் தோற்றுவது அஞ்ஞான விபரீதத்தினுலாம். அவ்விபரீதத்தை மறந்துவிட்டால் நமது சொரூபமே அத்துவிதமாய்ப் பிரகாசிக்கும்.

கடலொன்றே ஓலேயினுலே நுரை திரை திவலை குமிழியாதிய நானுவிதமாகத் தோற்றும். ஓலேயினுல் அங்ஙனம் பரவுதலின்றிக் கடலொன்றேயாகி முன்போலவே தோற்றும், அத்திருஷ்டாந்தம்போல யாவருந் துதிக்கின்ற பிரமசொரூபமானது சங்கற்பப் பகுப்பினுல் நானுவடிவங்களாகிச் சங்கற்பநாசத்தினுல் முன்போல அத்தொய்தமாகவே விளங்குகிறது.

பொன் ஒன்றே பல்லாபரணங்களாகிப் பற்பல பெயர்களைப் பொருந்துமாறு போலவும், சொர்ணம் இல்லாமல் அலங்காரம் எப்படியில்லையோ அது போலவும், அலங்காரத்தினுலே சொர்ணம் எப்படி விளங்குகிறதோ அது போலவும், ஆத்மசொரூபமே சரீர முதலாகிய பிரபஞ்சங்களாய்ப் பிரகாசிக்கும் வேறில்லை. அகண்டாகாரஞானம் ஒன்றேயாகும். அப் பரிபூரண ஞானமானது வியாபிக்குமட்டும் பலவகைப்பட்ட திருசியங்கள் தோற்றும்.

வானமுதல் வாய்வனல்நீர் மண்பூதங்கள்
மற்றுமுளசகம் புவனம் வரைகள்மேரு
தானதிசையருக்கன் மதியுடுக்கள் வேலை
சகலவுயிர் தாபரங்கள் சராசரங்கள்
ஊனுயிர்கணர ருக்கர் உம்பர்தேவருள
திலதிங் குட்புறம்புமேல் கீழெல்லாம்
நானீயென்பது வெல்லாம் பிரமமல்லால்
நவிலுதற்கு வேறுண்டோ நவில்நீ வேந்தே.

என்ற சுருதிவாக்கியப்படிச் சகலமும் பிரமமாம். அற்பமும் வேறேயில்லைச்

சரீர முதலாகிய பிரபஞ்சங்களாய்ப் பிரகாசிக்கும். புடவையினிடத்திலே சித்திரம் ஆரோபிக்கப்பட்டதுபோலப் பரமாத்துமாவா யிருக்கிற தன்னுடைய சொரூபத்தில் ஜீவன் ஜகத்து ஈசுவரன் என்கிற சித்திரம் ஆரோபிக்கப்பட்டது. ஆகையால் இவ்விடம் அவ்விடம் என்று ஒரு பிரிவும் இல்லை.

அகண்டாகார ஞானம் ஒன்றேயாகும். அப்பரிபூரண ஞானமானது வியாபிக்குமட்டும் பலவகைப்பட்ட திருசியங்கள் தோன்றும்.

தானுண்டாகி லுலகுண்டாம்
 தானுண்டாகி லுயி ருண்டாம்
தானுண்டாகில் பர முண்டாம்
 தானுண்டாகில் வீடுண்டாம்
தானுண்டாகில் பஞ்ச தொழில்
 தானுண்டாகுந் தன்னை யன்றித்
தானுண்டோ மற்றவை யதனுற்
 றுனேயனைத்தும் வேறில்லை.

மரவடிவத்தாற் யானையொன்றைக் காண்போர் மிகவும் கவனித்து மரவடிவத்தினையே செவ்வதின் உற்றுக்காண்பார்களாயின் மரயானை மறைந்துநிற்கும். அம்மரத்தாற் செய்த உருவினையே யானையாகப்பாவித்துப் பார்ப்பார்களாயின் மரத்தைமூடி யானையே தோன்றும். அத்திருஷ்டாந்தம்போல, நாமரூபவிடயங்களை நோக்கிப்பார்ப்பது மனமும் பகிர்முகமுமாம். நாமரூப விடயங்களை விட்டுப்பார்ப்பது ஞானமும் அந்தர்முகமுமாம்.

நாமரூபங்களில் எவ்வளவு காலம் திருஷ்டியோ (அவ்வளவு காலமும்) அறிவு தோன்றாது. நாமரூபங்களில் திருஷ்டி நீங்கினுல் நமது ஆத்தும சொரூபம் தோன்றி விளங்கும். அன்றியும்,

வினு:—நிர் விகாரம் எப்படி யென்றால் ?

" பொன்னிலே பூணும் புவியினிற் கடமும்
 புணரியிற் றரங்கமும் போல " என்றபடி

காரணமான சொர்ணந் தானே நசியாமல் காரியமாய் அனேக ஆபரணமாய்த் தோன்றுகிறதே நிர்விகாரம்.

காரியமான வில்வ விருட்சந் தானே காரணமான வில்வவிரையைத் தோற்றுவித்தாற்போலக் காரியமான நாமரூப பிரபஞ்சமாவது தன்னுடைய காரணமான சிவனைத் தோற்றுவிக்கிறது.

வினு:—பஞ்சகோசம் யாவை?

அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞான மயகோசம், ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் ஆக ஐந்து.

அன்னமயத்தா லமையப்பட்டது தேகம்
தேகத்திற் குட்பட்டது பிராணன்
பிராணனுக் குட்பட்டது மனம்

மனத்திற் குட்பட்டது விஞ்ஞானம்
விஞ்ஞானத்திற் குட்பட்டது ஆனந்தம்.

இவ்வைந்துங் குகை.

இவற்றிற்கு அன்னியமாயிருப்பது ஆன்மா.

இவ்வைந்துமே ஆன்மாவென்று பன்மதத்தர்களும் இலௌகீகர்களும் சொல்வதால் இவற்றைத் தள்ளுவ தெப்படி ?

தூல தேகமே அன்னமயகோசமும், கர்மேந்திரியமும் பிராண வாயுவுங் கூடிப் பிராணமய கோசமும், மனமும் கருமேந்திரியமும் கூடி மனோமய கோசமும், புத்தியும் ஞானேந்திரியமுங்கூடி விஞ்ஞானமய கோசமுமாம்.

இந்தக் கோசத திரயமே சூட்சும சரீர மென்றும் சொல்லப்படும்.

காரணசரீரமே ஆனந்தமய கோசமாம்.

வினு :—அன்னமய கோசமாவது எது ?

விடை:—தேகம் பருத்தல்.

வினு :—பிராணமய கோசமாவ தென்னை?

விடை:—பிராணவாயு.

வினு :—மனமாவது என்ன ?

விடை:—வாயுவுடன் கூடி தேகேந்திரியத்தை அதிட்டித்துப் பசி விஷயத்தை அறியும்.

வினு :—அந்தக்கரணங்கள் யாவை ?

விடை:—மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

வினு :—இவற்றின் தொழில்கள் யாவை?

விடை:—மனம் பற்றும், புத்தி நிச்சயிக்கும், சித்தம் சிந்திக்கும், அகங்காரம் கொண்டெழுப்பும், ஆகையால் இவ் வந்தக்கரணங்களைப் பற்றிச் சுவானுபூதிச் செல்வராகிய தாயுமான சுவாமிகள்

"அந்தக்கரணமெனு மாகாத பேய்களெனை
வந்து பிடித்தாட்ட வழக்கோ பராபரமே"

என்று கூறுவதனுல் இவ் வந்தக்கரணங்களை வெல்ல வேண்டும்; வென்றால் உடனே முத்தியாம்.

அன்றியும் மனத்தினுடைய விரிவே அந்தக்கரணங்களாக விரியும்; ஆகையால் மனமடங்கினுல் மோட்ச முண்டாம்.

"மனமெனும் பகைவனுங்குத் துயின்ற போதொ
ளித்து நின்ற தோன்றலுந் தோன்றுங்
கண்டாய்" என்றும்

திருவாரூர் தேவாரம்

"தீப்பரிய பல்பிறவி நீக்கும் வண்ண நினைந்திருந்
தேன் காணெஞ்சே நித்தமாகச்
சேப்பிரியா வெல்கொடியினானே யென்றும்
சிவலோக நெறிதந்த சிவனே யென்றும்
பூப்பிரியா நான்முகனும் புள்ளின் மேலைப்
புண்டரீக் கண்ணனும் போற்றி யென்னத்
தீப்பிழம்பா நின்றவனே செல்வமல்கு
திருவாரூரா வென்றே சிந்தி நெஞ்சே"

என்னும் வேதவாக்கின்படி மனமடங்கினால் முத்தியாம். அன்றியும், உதான வாயுவுடன் கூடி சட்சேந்திரியத்தை அதிட்டித்து ரூப விஷயத்தை அறியும் புத்தியும், அபான வாயுடன் கூடிச் சிங்குவேந்திரியத்தை அதிட்டித்து இரச விஷயத்தை அறியும் சித்தமும், அறிதல் உபஸ்தம் ஆனந்தித்தல் பிராண வாயுவுடன் கூடி ஆக்கிராணேந்திரியத்தை யதிட்டித்து கந்த விஷயத்தை அறியும் அகங்காரமும் ஆகிய இவற்றை யெல்லாம் அத்தியாரோப வுத்தி யென்று சொல்லப்படும்.

ஆதி ஆத்மீகமாவ தென்னை ?

தத்தம் சரீரத்திலுண்டான வியாதிகளினாலும், இராஜாங்கத்தாலும், பசாசுகளினாலும், கள்வராலும் மனிதராலும் உண்டாகுந் துக்கம். பிறருடைய கல்வியும் சௌந்தரியமும் செல்வமுங் கண்டு பொறாமை கொள்ளல், அபிமானங் கெடுதல், வருத்தம் விளைதல் முதலியனவாம்.

ஆதி பௌதீகமாவதென்னை ?

காற்று, மின்னல், இடி, சுவர் விழுதல், கல் விழுதல் இவை முதலியனவாம்.

ஆதி தெய்வீக மாவ தென்னை ?

மாதாவின் கருப்பத்தி லிருக்குமிடத் துண்டான விசனம், பின் சநநம், நரை, திரை, யமதண்டம், நரக வேதனை முதலியனவாம். இது தேகமென்று அறிந்த அறிவே நான். என்னாலே அறிந்த தேகம் என்னை யறியாது. சடமான படியினாலே அந்தத்தேகமே நானானால் தேகம் போனால் நான் போக வேணும்; நான் போகவில்லையே.

(தொடரும்.)

விநோதம்!

நண்பர் :—உங்கள் பெண் சிரமப்பட்டு சங்கீதம் கற்றுக்கொள்ளுகிறாள்போல் இருக்கிறதே?

இவர்:—இல்லை அவள் சங்கீதத்திற்கு மிகுந்த சிரமம் கொடுக்கிறாள்.

# " நவரத்தினங்கள் "

நபிகள்நாயகம் நவின்றருளியது.

(P. S. M. E. முஹம்மது யாக்கூபு சாஹிப்.)

இறைவனால் இயற்றப்பெற்ற எப்பொருள்கண்மாட்டும் அன்பு பாராட்டு கிறவரிடம் அந்த ஒப்புற்ற இறைவனும் அன்பு பாராட்டுகிறான்; ஆகலின் தூயவனா யிருப்பினும், தீயவனா யிருப்பினும், யாரா யிருப்பினும் இவ்வைய கத்தின்கண் உள்ள மனிதரிடத்து அன்பாயிருக்கவேண்டும். தீய தன்மையுள்ள மனிதனிடத்து அன்பா யிருப்பதால் அன்னவன் அத்தீமையி னின்றும் நீங்கி விடுகின்றான். இதனால் விண்ணுலகில் வாழும் அமரர்கள் உங்கள் மாட்டு அதி அன்பா யிருப்பார்கள்.

"குர் ஆன் ஷரீபில்" ஐந்து விடயங்கள் குறிக்கப்பட் டிருக்கின்றன. அவை, சட்டத்துக்கு உடன்பாடான விடயங்களும், சட்டத்துக்கு முரணான விடயங்களும், தெள்ளியதாகவும் அழுத்தமாகவும் கூறப்பட்ட உபதேசங் களும், கரந்துறையும் இரகசியங்களும் திருஷ்டாந்தரமா யிருக்கின்றன. ஆத லின் ஏவலான விடயங்களைச் சட்டத்துக்குக் கட்டுப்பட்டவை யென்றும், விலக்கலான விடயங்களைச் சட்டத்துக்கு முரணானவை யென்றும் கருதி, உண்மையான உபதேசங்களுக்குக் கீழ்ப்படிந்து, கரந்துறைவனவற்றை யெல்லாம் நம்பி, திருஷ்டாந்தரமான விடயங்களி லிருந்து நல்லறிவைக் கற்றுக் கொள்ளுங்கள்.

நீர் வார்த்தையாடும்போழ்து உண்மையையே யுரைப்பீராக; ஒரு முறை வாக்களித்துவிட்டால் அதை நிறைவேற்றி வைப்பீராக; நும்மிடம் அயலாரால் ஒப்புவிக்கப்பட்ட அமானத்தை (அடைக்கலம்) பூர்த்திசெய்வீ ராக; அயலார் மனை விழையாதிருப்பீராக; விபசாரத்தினின்றும் விடுதலை பெறுவீராக; ஆபாஸமான துராசைகளை யொறுத் தெறிவீராக; சட்டத் துக்கு முரணானதும் தீமையானதுமான வஸ்துவைத்தீண்டுதலினின்றும் நும் முடைய கரத்தை விலக்கி வைப்பீராக; எஞ்ஞான்றும், எப்போழ்தும் அவ் வினையிலா இறைவனையே யுன்னி யிறைஞ்சித் துதிப்பவர்கள் அவ்விறைவ னுடைய அருண்மிக்க நல்லடியாராகின்றனர். எப்போழ்தும் குறளை கூறிக் கொண்டும், மித்திர பேதத்தால் நண்பர்களை ஒருவரைவிட்டு ஒருவரைப் பிரிவினை செய்துகொண்டும், நல்ல மனிதர்களிடத்தில் என்ன விதமான தீமைகளுண்டென்று அவற்றைத் தேடிக்கொண்டும் அலைபவர்களே இறை வன் மாட்டு கெட்ட அடியார்களாய் விடுகிறார்கள்.

ஒரு சிநேகிதனை மற்றொரு சிநேகிதனுடன் சேர்த்து வைக்கும் பால மானது மரணமா யிருக்கிறது.

இப்பரந்த பூவுலகமானது மறுவுலகுக்கு வேண்டிய உழுநிலமா யிருக்கிறது. ஆதலின் அவ்வுலகில் அறுவடை செய்யும் வண்ணம் இவ்வுலகில் நன்மை செய்யுங்கள்; ஏனெனின்? நாமெல்லாம் முயற்சி செய்ய வேண்டுமென்பது தான் இறைவனுடைய கட்டளை; இறைவன் அருளியதை நாம் அடைய வேண்டுமாயின் நம்முடைய முயற்சியைக் கொண்டே அதைப் பெற வேண்டும்.

எவனொருவன் அறிவைத் தேடி அதை அடைகிறானோ அன்னவன் இருவகையான வெகுமதி பெறுவான்; அறிவையடைய வேண்டுமென்று உன்னினதற்காக ஒரு வெகுமதியும், அப்படிப்பட்ட அறிவை அடைந்ததற்காக மற்றொரு வெகுமதியும் பெறுவான். ஆகலின் ஒருவன் அறிவையடைய வேண்டுமென்று ஆர்வங்கொண்டு விடுவானாயின் அவ்வகை யறிவு அவனுக்கு எய்தா விடினும் அவனுடைய ஆவலுக்காக மட்டுமாவது ஒருவகை வெகுமதி கிடைக்கும்.

நான்கு விதமான பண்புகளின் காரணமாக ஒரு பெண்ணை மணவினை செய்து கொள்ளலாம். (1) அவளுடைய ஐஸ்வரியம்; (2) அவளுடைய குலத்தின் தொன்மைப் பெருமை; (3) அவளுடைய எழில்; (4) அவளுடைய சற்குண விசேடம்; இவற்றுள் குணவிசேடமுள்ள நல்ல பெண்ணையே நீங்கள் தேடிக்கொள்ளுங்கள்; இந்த ஒரு காரணத்தாலல்லாமல் வேறு ஏதேனுமொரு ஏதுவால் ஒரு பெண்ணை நீங்கள் மணவினை செய்து கொள்ளுவீர்களேல் உங்களுடைய கரங்கள் புழுதியிற் போட்டுத் தேய்க்கப் படட்டும்.

என்னுடைய இறைவன் எனக்கு ஒன்பது காரியங்களை நியமித்திருக்கின்றான். அவையாவன:(1) அகத்திலும் புறத்திலும் அவ்விறைவனுக்கு வணக்கம்புரிதல்; (2) செல்வநிலையின் போழ்தும் ஏழ்மையின் போழ்தும் வாய்மைபிறழாமலும், தகுந்த வண்ணமாகவும் பேசுதல்; (3) செல்வாக்கிலும் நல்குரவிலும் மிதமா யிருத்தல்; (4) எனக்குக் கிஞ்சிற்றும் உதவி புரியாத அப்படிப்பட்ட உற்றாருக்கும், உறவினருக்கும் நான் உதவி புரிதல்; (5) எனக்கு இல்லை யென்பவனுக்கு யான் இல்லை யென்னாது தருமம் ஈதல்; (6) எனக்குத் துன்பம் புரிகிறவனை நான் மன்னித்தல்; (7) ஆண்டவன் சார்பான ஞானத்தைப் பெறும் பொருட்டு மௌனமா யிருத்தல்; (8) நான் பேசும்போது அவனை (இறைவனை) யும் குறித்துப் பேசவேண்டும்; (9) இறைவனுடைய சிருஷ்டிகளைக் காணும்போழ்து அவற்றிற்கு என்னுடைய பார்வையானது மற்றையோருக்கோர் உதாரணமா யிருக்கவேண்டும்; மேலும் சட்டத்துக்கேற்ற காரியத்திலேயே நான் பிரவர்த்திக்க வேண்டுமென்று அவ்விறைவன் கட்டளை யிடுகின்றான்.

இறப்பும் பிறப்பும் இன்றி ஒப்பற்று விளங்கும் அவ்விறைவனுக்கு வேறொன்றை இணைவைப்பதும், நம்முடைய தாய் தந்தையரைத் துன்புறுத்துவதும், நம்முடைய மனித வர்க்கத்தைக் கொலை புரிவதும், நீங்களே தற்கொலை புரிந்து கொள்வதும், பொய்ச் சத்தியம் பண்ணுவதும் மகா கொடிய பாபங்களா யிருக்கின்றன.




## பேதமையோ மாதர்க் கணிகலம்?

G. சுமதிபாய், பி. ஏ., எல். டி.

"பேதமை என்பது மாதர்க்கணிகலம்" என நம் நாட்டில் இன்னும் அனேகர் கூறுவர். இத்தகைய பழமொழிகளும் இவைபோன்ற உபதேசங்களும் அல்லவா நமது நாட்டுப் பெண்களின் தற்கால ஈனஸ்திதிக்குப் பெருங்காரணம்? பெண் பேதையாயின் ஆண்களுக்கு ஆதாயமிருக்கலாம். ஆனால் பெண்களுக்கு அதன் பயன் கேடாகவன்றோ முடியும்? பேதைமையினாலன்றோ பெண் தன் பதவிக்கேற்ற கண்ணியத்தை இழந்தனள்; ஸ்வதந்தரத்தை இழந்தனள்; கல்வி உரிமை, பொருள் உரிமை இழந்தனள்; மற்றும் மாத்ரு கௌரவத்தையே இழந்தனள். இன்னும் முற்றும் அழிந்துபோவதற்கோ அவள் பேதமை தரித்திருக்கவேண்டும்?

வெகு சிரேஷ்டமெனக் கொண்டாடப்படும் வேதகாலத்திலும் பெண்கள் பேதையரா யிருந்தனரோ?—ஒருநாளுமில்லை. ஆண்களைப் போலவே பெண்களும் அக்காலத்தில் சகல கலைகளும் பயின்றனர். அவர்களில் அனேகர் வில்வித்தை, குதிரையேற்றம் முதலிய யுத்தத்திற்குரிய சாஸ்திரங்களிலும் தேர்ந்து, போர்க்களத்திற்கும் முதன்மையாகச் சென்றனர். அவர்களில் கற்றுணர்ந்த கலைமகளிரும் சந்நியாசினிகளும் தபஸ்வினிகளும் மிக்கிருந்தனர். இந்து தருமத்திற்கே மூலாதாரமான வேதசூத்திரங்களை இயற்றிய ரிஷிகளில் மமதா, வாக், ரொமேஷா, ஸ்வஸ்தி, அபாலா முதலிய அநேக பெண்மணிகள் உண்டு. தம்முடைய பாண்டித்யத்திற்காகப் பிரம்மவாதினி என்ற பட்டம்பெற்ற மடந்தையரும் வெகுபேர் இருந்தனர். வித்யா பூஷணங்களாகிய அக்காலத்துப் பெண்கள் ஆண்களுக்கு நிகராகச் சகல சுதந்தரமும் அனுபவித்தது வியக்கத்தக்கதோ? பௌத்த காலத்திலும் பெண்கள் மேலான நிலைமையே வகித்தனர். காசிசுந்தரி, சுப்ரியா, க்ஷேமா, மாலினி ஆகிய இவர்களைப்போன்ற பௌத்த பிக்ஷுணிகள் கணக்கற்ற ஜனங்களுக்கு தரும சேவையும் ஞானோபதேசமும் செய்துவந்தனர். இதிஹாச காலத்திலும் பெண்கள் அநேக கலைகள் கற்கவேண்டியது அவசியமாயிருந்தது. இக்காலத்திலோ பெண்கள் கலையென்பதைக் கனவிலும் காண்பதரிதாகி விட்டது. இதனால் நம்முடைய இந்து ஸ்திரீகள் இக்காலத்தில் கல்வி அறிவின்றி, அஞ்ஞானத்திலாழ்ந்து சகல ஸ்வாதீனமும் இழந்து, புருஷர்களுக்கு அடிமையாகி அவர்கள் இட்டதே சட்டமெனக் கொண்டு அவர்கள் சொல்வதற்கெல்லாம் உடன்பட்டு நடக்கவேண்டியதாயிற்றன்றோ! இதுவோ நமது இந்து தர்மம்? ஆதிகாலத்தில் பாரத மகளிர் வித்யாபூஷணம் தரித்தனர். அந்தோ! இக்காலத்தில் பேதமையோ மாதர்க் கணிகலம்?




"அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்" என்பது வள்ளுவர் இன்குறள்.

இந்நிலவுலகில் மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் அன்பெனும் பாசத்தால் பிணிப்புண்டு ஒருவரை யொருவர் தழுவி வாழ்வது கண்கூடு. "அன்பின் வழியது உயிர்நிலை" என்பது ஓர் சிறந்த உண்மை. ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்ற தாய்க்கு தன் சேயிடத் தன்பு; காதலனுக்குத் தன் காதலியிடத் தன்பு. அடியவர்கட்கு இறைவனிடத் தன்பு. அன்பர்கட்கு தங்கள் நண்பரிடத் தன்பு. ஆகவே எங்கு பார்த்தாலும் அன்பு மயம். அன்பெனும் அச்சாணியில் உலகெனும் உருள் பெருந் தேர் ஓடிக் கொண்டிருப்பது யாவரும் கண் கூடாய்க் காணும் ஓர் காட்சியாகும். நிற்க உலகம் போற்றும் உயரிய நூலாம் இராம காதையை, கம்பரது கவிதா விலாசத்தில் கண்டு களித்த யான், அக்காதையில் அன்புடைத் தோன்றலாய் விளங்கும் வேடர் வேந்தனும் குகனைப்பற்றிப் பலகாலும் நினைந்து நினைந்து உருகியதுண்டு. இவ்வேடர் வேந்தனது அளவில் அன்பின் பெருக்கத்தைப் பற்றி ஒரு சில குறிப்புகள் தரவே இக்கட்டுரை எழுந்ததாகும்.

"தூய கங்கைத் துறைவிடும் தொன்மைய"னை இவ்வேடர் வேந்தனை நாம் முதன் முதலில் கங்கைக் கரையினிடத்தே காண்கின்றோம். "தாய் வரங்கொள்ளத் தந்தை யேவலால்" நாடிறந்து காடு நோக்கி வருகின்ற வள்ளலைக் காணவந் தெய்துகின்றான் குகன். எய்தி ஏந்தல்முன் "தேவா நின் கழல் சேவிக்க வந்தனன் நாவாய் வேட்டுவன் நாயடியேன்" என்றிறைஞ்சி நிற்கும் குகனது குணப் பொலிவைக் கண்டு மகிழாக் கவிஞரு முளரோ? அண்ணலே நின் அரசுரிமையின் கீழிருக்க. "பெருநிலக்கிழத்தி நோற்றும் பெற்றிலள் போலும்" என்று இரங்குகின்ற இவனது உள்ளம் கற்றோர் உளத்திற்குக் கழிபேருவகை தருவதாகும் இப்பெரு நிலக்கிழத்தி இழந்த பெருமையினை இச் சிறு நிலக்கிழவனும் வேடர் வேந்தன் தன்ன தாக்க விரைகின்றான். அன்புடை அண்ணலைத் தன்னுடனேயே இருந்து தன் குற்றேவலை ஏற்று தன்னை மகிழ்வித்தருளல் வேண்டும் என்றிறைஞ்சுகின்றான். இவ்விடத்து, அன்பின் பெருக்கால் தான் வேடுவன் என்பதை

யும் இராமன் அரசர் பெருமகன் என்பதையும் மறந்து, அவனையும் தன்னினத்தவனாகவே கருதி

"தேனுள தினையுண்டாற் றேவரு நுகர்தற்காம்
ஊனுளது, துணை நாயேம் உயிருள, விளையாடக்
கானுள, புனலாடக் கங்கையுமுள தன்றோ
நாளுளதனையும்நீ யினிதிரு நடவெம்பால்"

என்று கூறுஞ் செவ்வி கம்பர் உளத்தில் உருக்கொண்ட அன்பின் மாட்சியை விளக்குகின்றது.

இவ்விருப்பத்திற்கு, இராமன் இணங்காமை கண்ட குகன் இராமனையும், இலக்குவனையும், சீதையையும் தனது தோணியிலேற்றி, நெடுநீர்க் கங்கையை கடிதினிற் கடந்து தென்கரை சேர்க்கின்றான். தென்கரை சேர்த்த அண்ணலைப் பிரிவதற்கு வருந்தி, "பொருவரு மணிமார்பா போதுவனுடன்" என்று கண்ணினீர் அருவி சோரக் கலங்கி அழுது கரைகின்றான். அப்போழ்து, அறத்தின் வழிநின்ற ஆரியர் கோனும் இராமனது உளத்தில் ஆழ்ந்து கிடந்த அன்பெனும் அளப்பருஞ் சலதி பொங்கி வழிவதாயிற்று. கன்றினைப் பிரியும் ஆவெனக் கலங்கி "அன்ப! நீ வேறு, நான்வேறு என்று கருதாதே. நான் உன் உடன் பிறந்தவன். என்னுடனிருக்கும் இவ் விளவல் உன் இளையான். இந்நங்கை நின் சுற்றம் என்றே கருதுக" என்று கூறியதோடமையாது, குகனைத் தனது நாட்டிற்குக் கோமானாக்கி தன்னை அவனது தொழில் செய்பவனாகவும் செப்புகின்றான். இதையே கவியரசர் கம்பர் பெருமான்,

"அன்னவன் உரை கேளா வமலனு முரை நேர்வான்
என்னுயிரனையாய் நீ, இளவல் உன் இளையான்
நன்னுதலவள் நின்கேள், நளிர் கடல் நிலமெல்லாம்
உன்னுடையது நான் உன்தொழில் உரிமையில் உள்ளேன்"

என்று கூறுவாராயினர். என்னே இவனது அன்பு!

"முன்புள ஒரு நால்வேம் முடிவுளதென வுன்னா
அன்புள இனி நாமோர் ஐவர்கள் உளரானோம்"

என்று இராமன் குகனிடத்துப் போற்றும் சகோதரப் பான்மையைக் கம்பர் எவ்வளவு அழகாகக் கூறி யிருக்கின்றார்.

கவியரசராம் கம்பர் பெருமான், தனது இராம காதையில் குகப் பெருமானைக், கவி உலகில் முதல் முதல் காட்டுகின்ற காலத்து, இராமனுடன் சேர்ந்து உரிமையில் உள்ளவர்களில், இவன் தலை சிறந்தவன் என்னும் கருத்தை மக்களிடையே புகவிடுகின்றார். இக்கருத்தையே பின்னர் பலவிடத்தும் பலவாயிலும் அமைத்து, தான் குகனைப்பற்றிக் கொண்டிருக்கும் கருத்தை வலியுறுத்துவராயினர். பிறப்பினால் உயர்வு கற்பித்துக் கொள்ளும் போலி

மக்களிடையே எழுந்த இந்த இராம காதை, கம்பரது கவிதா விலாசத்தில் அன்பெனும் பெரு வெள்ளத்தில் திளைத்து, "பிறப்பொக்கும் எல்லா உயிர்க் கும்" என்ற உயரிய கொள்கை யுடனே மிளிர்வதாயிற்று.

கங்கை யிரு கரையுடைய நாவாய் வேந்தனை தனது உரிமைத் தம்பி யருள் ஒருவனுகக் கருதி, இராமன் பாராட்டியது காலத்திற்கேற்ப நடக்கும் அரசரது அரசியல் வழக்கு என்று சிலர் கூறலாம். அது அன்பின் பெருக்கால் எழுந்த கூற்றல்ல என்றும் எள்ளி நகையாடலாம். ஆனல் கம்பரது கருத்து அதுவல்ல என்பதே தமியேனுடைய தாழ்ந்த கருத்தாகும். இராமன் தனக்கு தற்போது இவன் செய்த சிறிய உதவியைப் பாராட்ட மட்டும் "இனி நாமோர் ஐவர்கள் உளராளேம்" என்று கூறியிருப்பானே யானல், பின்னர் தண்கடலின் வடகரையில், இலங்கை வேந்தனது தம்பியாம் விபீடணன், தன்னிடம் அடைக்கலம் புகுந்த காலத்து

"குகனெடும் ஐவராளேம், வனத்திடை குன்று சூழ்வான்
மகனெடும் அறுவராளேம் எம்முழை அன்பின் வந்த
அகனமர் காதலைய நின்னெடும் எழுவராளேம்
புகலரும் கானந்தந்து புதல்வராற் பொலிந்தானுந்தை"

என்று கூற வேண்டுவது அவசியமின்று. "அன்பிற்கு முண்டோ அடைக் குந்தாழ்" என்ற வள்ளுவர் பெருமானது திருவாக்கிற் கிணங்க அன்பெனும் பாசத்தால் எழுந்த சொற்கள்தா னிவை என்பதில் ஐயமில்லை. ஆரிய கவி யாம் வான்மீகியினது சித்திரத்தி லெழுந்த இராமனது உளமன்று இது என்று சொல்வார் சொன்னல் சொல்லட்டும். நமக்கு அதைப்பற்றி ஒரு சிறிதும் கவலையில்லை. இக்கட்டுரையில் காட்டப் பெறுபவன் கவி உலகில் நாம் காணும் கம்பரது இராமனே யாகும். நிற்க இந்தச் சோதர பாவனையை இராமன் மட்டுந் தானு பாராட்டுகின்றான்? இல்லை! அவனது காதற் கிழத்தி யாம் சீதையும், பெருந் தகைமைக் கோசலையும், "நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலைய" மாகிய பரதனும், மற்றும் மந்திரித் தொழில் பூண்ட சுமந்திரனும் இன்னும் பலரும் போற்றிப் புகழ்கின்றார்கள். "அமரர்தம் புகழ் விழுங்கிய அரக்கர் கோன"து அசோக வனத்தில் அரக்கியர் புடைசூழ விருந்த தன் நாயகனைப் பிரிந்து வருந்தும் நங்கை,

ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு எம்பியுன் றம்பிநீ
தோழன் நங்கை கொழுந்தி யெனச் சொன்ன
ஆழி நண்பினை உன்னி அழுங்குவாள்"

என்று கூறும் கம்பர் கவி நலம் போற்றுதற் குரியதாகும்.

இக் "குகனெனப் பெயரிய கூற்றினுற்றலான்" கங்கைக் கரையில் நிற் கின்றான். தாயுரைகொண்டு, தாதை உதவிய தரணி தன்னைத் தீவினை யென்ன நீத்து சிந்தனை முகத்திற்றேக்கி, திசை நோக்கித் தொழுத கையின ளுய் வருகின்ற நிறை குணத்தவனும் பரதன், இவன் யாவன் என்று குக

னைச் சுட்டிக் காண்பித்து தன் பக்கலில் வரும் சுமந்திரனிடத்துக் கேட்கின்றான். அதற்குச் சுமந்திரன்.

கங்கையிரு கரை யுடையான்
கணக்கிறந்த நாவாயான்
உங்கள் குலத்தனி நாதற்கு
உயிர்த் துணைவன் உயர் தோளான்
வெங்கரியின் ஏறனையான்
வில் பிடித்த வேலையினான்
கொங்கலர்த்தார் நயுந்தண்டார்க்
குகன் என்னும் குறியுடையான்.

என்று அறிமுகப் படுத்துகின்றான். தசரதனது நன்மந்திரியாம் சுமந்திரனாலும், இரவி குலத்தின் தனி நாயகனான இராமனது உயிர்த் துணைவன் என்று போற்றப் பெறும் பேறு பெற்றான் நம் வேடர் வேந்தன். இவ்வாறு அறிமுகப்படுத்தப்பட்ட அரசர் பெருமகனும் வேடர் வேந்தனும் ஒருவரது அடியில் ஒருவர் வீழ்ந்து வணங்கி, ஒருவரை யொருவர் தங்கையினுங் களிகூரத் தழுவி, ஆராவுவகை எய்துகின்றனர். இனி இப் பண்பு மிக்க பரதன் இராமனது நலத்தைப்பற்றி வேடர் வேந்தனிடம் அறிய வேண்டியதை அறிந்தபின் இருவரும் சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற கோசலையை அணுகுகின்றார்கள். அப்பெருமகன் தனது அன்பனை ஈன்றெடுத்த அன்னையென்பதறிந்து அவளது அடியின்மிசை நெடிது வீழ்ந்து, அழுகின்றான் குகன். அக் "கன்று பிரி காராவின் துயருடைய கொடி"யாம் கோசலையும், இவன் யாவன் என்று வினவ அதற்குப் பரதன்.

"இன் துணைவன் இராகவனுக்கு, இலக்குவற்கும்
இளையவர்க்கும் எனக்கும் மூத்தான்
குன்றனைய திரு நெடுந் தோட் குகனென்பான்"

என்று அன்பின் திறத்தை விளக்கிக் கூறும் தனிப்பெருஞ் செவ்வி கம்பருடையதே யாகும்.

இராமன் பாராட்டும் சோதரத் தன்மையையே இப் பண்புடைப் பரதனும் பாராட்டுகின்றான். என்னே! இவனது தோற்றமென்ன? தனது மைந்தரது தோற்றம் என்ன? இவனுக்கும் அவர்கட்கும் எத்துணை வேற்றுமையுளது. அப்படி யிருந்தும், இவனை, இப்பரதன் தன் காதற்றிருமகன் இராமனது தம்பி யென்றும், தனக்கும், இலக்குவனுக்கும் அவனுக்கு இளையவனுக்கும் இவன் மூத்த சோதரன் என்று எவ்வாறு கூறுகின்றான்? என்று கருதினளா கோசலை? இல்லை. அவளிடத் திருந்த அன்பென்னுங் கதவம் திறக்கப்பட்டு, அவளும்

"நைவீரலீர் மைந்தீர் இனி த்துயரால்
காடிறந்த நாடு நோக்கி

மெய்யுரா பயாநதுவும் நலமாயிற்றும்
அன்றே விலங்கற்றின் டோன்
கைவீரக்களிறனைய காளை யிவன்
தன்னோடுங் கலந்து நீங்கள்
ஐவீரும் ஒருவீராய் அகலிடத்தை
நெடுங்காலம் அளித்திர் என்றான்''

என்று வாழ்த்துவதாகக் கவியரசர் கவியாற்றுகின்றார். இவ்விதம் கோசலை வாய்ப் பெய்து கூறுவது.

''முன்புள ஒரு நால்வேம் முடிவுள தென வுன்னு
அன்புள இனி நாமோர் ஐவர்களுள ரானோம்''

என்று இதற்கு முன் இராமன் கூறியதின் எதிரொலியே யாகும். இவ்வா றெல்லாம் குகன் பலராலும் போற்றப்படுதற்குக் காரணம், அவனிடத் திருந்த அன்பெனும் அளப்பரும் அமுதமே யாகும். அவ்வன்பெனும் அமுதம், தன்னைத் தடங்காது, கற்றார் இதயங்களில் காதலரைக் கண்ட காலத்து பொங்கி வழிவதாயிற்று.

இன்றும் இராமன், சடை முடியும் மரவுரியும் தரித்த கோலத்தை, கண்ணில் நீருகி சோர நின்று கண்ட குகன்

''கார்குலாம் நிறத்தான் கூறக் காதலன் உணர்த்துவானிப்
பார்குலாம் செல்வ நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனேன் யான் இன்னலின் இருக்கை நோக்கி
தீர்கிலேன் ஆனதைய செய்குவன் அடிமை என்றான்''

என்னே இவனது அன்பு. இதனாலன்றோ, அரக்கர்கோன் அவனது அரச மாளிகையின் உப்பரிக்கை மீது நின்றிருந்த காலத்து கவிக்குல வேந்தனும் சுக்ரீவன் அவன் மேல் பாய்ந்து அவனது மகுடங்களை யுதைத்துத் தள்ளி அவனைப் பங்கப்படுத்தி, திரும்பி இராமனையடைய இவன் செய்த செயலுக் காக இராமன் வருந்த, அதற்கு கவியரசன்,

காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்ட மாட்டேன்
நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்க மாட்டேன்
கேட்டிலேன் இன்று கண்டும் கிளிமொழி மாதராளை
மீட்டிலேன், தலைகள் பத்துங் கொணர்ந்திலேன் வெறுங்கை வந்தேன்.

என்று கூறி குகனது அன்பைப் பாராட்டுகின்றான். இவ்விடத்து முற்றுந் துறந்த முனிவராம் பட்டினத்தடிகள்.

''வாளால் மகவரிந் தூட்ட வல்லேனல்லேன் மாது சொன்ன
சூளால் இளமை துறக்க வல்லேனல்லேன், தொண்டு செய்து
நாளாறிற் கண்ணிடந்து அப்ப வல்லேனல்லேன் நானினிச் சென்று
ஆளாவ தெப்படியோ திருக்காளத்தி யப்பருக்கே''

என்று கூறுஞ் செய்யுள் ஞாபகத்துக்கு வருகின்றது. அன்பின் உயரிய நிலைக்கு சிறுத் தொண்டர், திரு நீலகண்டர், கண்ணப்பர் ஆகிய இவர்களைப்

பட்டினத்தடிகள் எடுத்துக் காட்டுவதொப்ப கம்பரும் சுக்ரீவன் வாயிலாக அன்பின் முதிர்ந்த நிலைக்கு, சடாயுவையும், குகனையும் எடுத்துக் காட்டு கின்றார். இதுவரை கூறிய ஒரு சில சான்றுகளால், அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ் என்ற தலையங்கத்தின் உள்ளுறைப் பொருள் இராம னிடத்தும் அவனுழை அன்பின் வந்த வேடர் வேந்தனிடத்தும் விளங்குவ தாயிற்று.

இஃது இவ்வாறிருக்க, இன்றும் இவ்விராம காதையை கதாப் பிர சங்கம் செய்பவர் பலருளர். இவர்களில் பரதனும் குகனும் சந்தித்த காலத்து, ஒருவரது அடியில் ஒருவர் வீழ்ந்து வணங்கி, பின்னர் எழுந்து தழுவினர் என்று கூறும்பொழுது முதலில் வீழ்ந்து வணங்கியவன் குகனே யென்பர் ஒரு சாரார், முதலில் வீழ்ந்து வணங்கியது பரதனே யென்பர் மற்றொரு சாரார். இவர்கள் இச்சந்தேகத்தையும்

"வந்தெதிரே தொழுதானை
வணங்கினன் மலர் இருந்த
அந்தணனுந் தனைவணங்கும்
அவனும் அவன் அடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத்
தழுவினன் தகவுடை யோர்
சிந்தையினுஞ் சென்னியினும்
வீற்றிருக்கும் சீர்த்தியான்"

என்ற செய்யுளில் புகுத்திக் காட்டுகின்றார். என்னே! இவர் தம் பேதமை! எவர் முதலில் அடிவீழ்ந்து வணங்கினு லென்ன? கம்பர் பெருமானது உள்ளமோ அருள் நிறைந்த உள்ளம்; அன்பு கனிந்த உள்ளம். அவரோ குகனது அடியில் பரதன் வீழ்ந்தான் என்று கூறுவது இழுக்கு என்று கருதுபவர். அவர் "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்று வள்ளுவர் அருளிய தெள்ளிய குண மாண்பின் உண்மையை உண்மையாய்க் கண்ட மூதறிஞரன்றோ. பரதனது அடியில் குகன் வீழ்ந்தான் என்று கூறுவதை விட நீதியில் நிலையமாய பரதன் அன்பின் உறைவிடமாய குகனது அடியில் வீழ்வது மிகவும் பொருத்தமான ஒரு செயலே யாகும்.

அக்காலத்து, அகத்தே ஒளிரும் அன்பெனும் மணியைப் புறத்தே குல மென்னும் மாசு படிந்துள்ள தென்பதை கவியரசர் கம்பர் பெருமான் நன்கு அறிவர். அம்மாசு நீக்கவே, குகனது அன்பின் பெருக்கையும் இராமனது உய ரிய தன்மையையும் ஒருங்கே தனது காவியத்தில் அமைத்துக் காட்டு கின்றார். இவ்வுண்மை அறியாத சிலர் எழுப்பும் இவ்வையம் அவர் தம் சாதிச் செருக்கினால் எழுந்த ஓர் ஐயமே யன்றி கம்பரது கவியில் எழுந்த ஓர் ஐயமாகக் கருத என்மனம் இடந் தருகின்றிலது.

கொள்வார் கொள்ளுக தள்ளுவார் தள்ளுக எடுத்த என்பணி முடித்து விடுகின்றேன்—திருவருள் முன்னிற்க—சுபம்.

— வேதாந்த —

# ஐய வினாவும் விடையும்.

(122-ம் பக்கத் தொடர்ச்சி.)

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீனிவாசன் எழுதியது.)

லட்சணையின் இலட்சணத்தை விளக்கவேண்டின் அதுவே ஓர் பெரு நூலாகும். அவ்வாறு விரித்து வாசகர்களின் மூளைக்கு மிக்க வேலை கொடுத்து மனக்குழப்பம் உண்டாக்குவதினும் யாதும் எழுதாதிருப்பதே உசிதமாம். ஏனெனின், அவ்வாறு விரித்துக் கூறும் விசாரசாகரம் முதலிய பல நூல்களிருத்தலின். ஆகவே, விஷயம் நன்கு புலனாமாறு சுருங்கக் கூறி விளங்கவைத்தலே ஈண்டமை வுடைத்தாகும்.

லட்சணை என்பது வடமொழிப் பதம். இலக்கண சம்பந்தமானது. நம்மாற் பேசப்படும் சொற்களில் பல தம் பொருளைத் தாமே வெளிப்படையாய் அறிவிக்கும். வேறு சில அங்ஙனம் வெளிப்படையா யுணர்த்தாமல் குறிப்பாக வுணர்த்தும். அங்ஙனம் குறிப்பா யுணர்த்துவனவற்றுள் லட்சணையு மொன்றாம். உதாரணமாக, 'வேலையில் மூழ்கினான்' என்று ஒருவன் கூறுகிறான். இவ்வாக்கியத்தில் கடற்கரை யெனப் பொருள்படும் வேலை என்னும் பதம் (வேலா=கடற்கரை, இது தமிழில் வரும்போது 'ஆ ஈறு ஐ ஆகும்' என்னும் விதிப்படி, சீதா என்பது சீதை எனவும் மாலா என்பது மாலை எனவும் வருதல்போல, வேலை எனத் திரிந்து வழங்கும்.) மூழ்கினான் என்னும் அடுத்த பதத்தோடு சேர்த்துப் பார்க்கும்பொழுது சரியான பொருள் தருவதில்லை. ஏனெனில், கடற்கரையில் மூழ்குதல் எவ்வாறு சம்பவிக்கும்? சம்பவியாதன்றோ? ஆனால் அர்த்தமோ உண்டாதல் வேண்டும். கடலில் மூழ்கினான் என்று கொண்டால் பொருள் சரியாகும். இருக்கும்பதமோ கடற்கரை (வேலை)யை யுணர்த்துகின்றது. ஆகவே, பொருள் பொருத்த முண்டாம்பொருட்டு இலக்கணை கொள்ளப்படுகிறது. அப்படி கொள்ளுவோமாயின் வேலை என்னும் பதம் தன் பொருளாகிய கரையைக் காட்டாமல் தன்னோடு சம்பந்தமுடைய கடலைக்காட்டும். அதனால் பொருளும் பொருந்தும். இவ்வாறு எங்கெங்கே பொருள் பொருத்த முண்டாகவில்லையோ அங்கங்கெல்லாம் பொருட் பொருத்த முண்டாம் பொருட்டு இலட்சணை கொள்ளப்படல் வேண்டும்; அதனால் வாக்கியப் பொருளின் ஞானம் இடர்ப்படாதுண்டாதல் வேண்டும் என்னும் நன்னோக்கத்தோடு ஆன்றோர்களால் லட்சணை அமைக்கப்பட்டது.

இனி, இத்தனை அவைகளை சம்பகாலத்தில் எழுதிவெளியிடப்பட்டு 'ஆனந்த போதினி' காரியாலயத்தால் விற்கப்பட்டுவரும் "ஞானசூரியோதயம் என்னும் வேதாந்த இரகசியார்த்த விளுவிடை" என்னும் நூலில்,—வேதாந்தக் கொள்கைகளை யாவரும் எளிதில் உணர்ந்துகொள்ள வேண்டியே எளியநடையில் விளக்கமாக எழுதப்பட்டிருத்தலின்-அதில் உள்ளபடி வரைவாம். "நம்மால் பேசப்படும் வாக்கியங்களிலுள்ள ஒவ்வொரு பதத்திலும் பொருளின் ஞானத்தை புண்டுபண்ணும் சக்தியொன்றிருக்கிறது. கடம் என்று சொல்லுகிறபொழுது, கடம் என்னும் பதமானது குடம் என்னும் ஒரு பொருளின் ஞானத்தை உண்டுபண்ணுகின்றது. அந்த ஞானத்தையுண்டுபண்ணும் சாமர்த்தியம் எதுவோ அதுவே சத்தியாம். அந்தச் சக்தியையுடைய அந்தப் பதத்தின் அர்த்தம் சக்கியார்த்தமாம் அச்சக்கியார்த்தம் வாச்சியார்த்தமென்றும் முக்கியார்த்தமென்றும் சொல்லப்படும். இதில் சொல்லுக்கும் அர்த்தத்திற்கும் நேரான சம்பந்தமிருக்கின்றது.

## லட்சியார்த்தம்

அந்த வாச்சியார்த்தத்தினுல் பொருள் பொருத்தமுண்டாகாதாயின் அவ்விடத்தில் கற்றுணர்ந்த பெரியோர் பொருள் பொருத்தமுண்டாவதற்காக வாச்சியார்த்தப் பொருளைவிட்டு லட்சியார்த்தத்தாற் பொருள்கொள்வர். பதத்தின் சக்தியால் அர்த்தம் ஏற்படாமல், அந்த அர்த்தத்தின் மூலமாக, அந்த அர்த்தத்தோடு சம்பந்தமுடைய வேறு அர்த்தத்தைக் காட்டுவது லட்சியார்த்தமாம். இந்த லட்சியார்த்தத்தில் பதத்திற்கும் அதன் பொருளுக்கும் நேரான சம்பந்தமில்லை; சக்கியார்த்தத்தின் மூலமாக வேறு பொருளோடு பரம்பரையாகச் சம்பந்தமிருக்கின்றது. அதாவது,

ஒரு சொல்லிற்கும் அதன் அர்த்தத்திற்கும் உள்ள சம்பந்தம் சப்தத்தின் விருத்தி எனப்படும். அந்த விருத்தி சக்தி விருத்தி லட்சண விருத்தி என இருவகையாம். பதத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் உள்ள நேரான சம்பந்தம் சக்தி விருத்தியாம். சக்தி விருத்தியினுலறியப்படும் அர்த்தம் எதுவோ அது வாச்சியார்த்த மெனப்படும். அவ் வாச்சியார்த்தத்தோடு சம்பந்தமுடையது லட்சண விருத்தியாம். அந்த லட்சண விருத்தியாலறியப்படும் அர்த்தம் லட்சியார்த்தமாம்."

ஆகவே, யாதாமொரு சொல் சக்க பொருளைத் தராதாயின் அப்பொருள் தோன்றும் பொருட்டு லக்ஷணை உபயோகிக்கப்படுகின்றது.

"ஆற்றல் உடைத்தாகற்பாலதன் சம்பந்தம் இலக்கணை."

தாற்பரிய வுணர்வுகிகழாமை இலக்கணைக்குக் காரணம்."

என்று தருக்க சங்கிரகமும்,

"இலக்கணை யென்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது" என நன்னூல் விருத்தி யுரையும் கூறுதல் காண்க.

இவ்வாறு வடமொழி யிலக்கணம் கூறும் இலக்கணை (லக்ஷணை)யை 'ஆகுபெயர் எனக் கூறும் தமிழிலக்கணம்.

* * *

ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன ஆகு பெயரே."

என்பது நன்னூற் சூத்திரம். ஆகவே இலட்சணை ஆகுபெயருள் அடங்குகின்றது. ஆகுபெயரையும் உதாரண முகத்தால் லட்சணையோடு பொருந்துமாறு காட்டுவாம். "சிவப்பு உழுதது" என்று ஒருவன் கூறுகிறான். இதில் 'சிவப்பு' என்னும் பதம் ஓர் நிறத்தைக் காட்டுகிறது. பக்கத்திலுள்ள 'உழுதது' என்னும் பதத்தைப் பார்க்குமிடத்து இரண்டு பதங்களும் பொருளிற் பொருந்துவதில்லை. ஏனெனில், சிவப்பு நிறத்தினிடத்து உழுதற்றொழில் சம்பவியாது. ஆகவின் சிவப்பு நிறத்தையுடைய எருது எனக்கொள்ளின் பொருள் பொருந்துகின்றது. இதுவே ஆகுபெயர். இங்கு சிவப்பு என்னும் பண்பு (நிறக்குணப்) பெயர் அதனையுடைய எருதுக்கானது பண்பாகு பெயராம். இவ்வாறு பொருளாகு பெயர் இடவாகு பெயர் முதலியனவாக ஆகுபெயர் பலதிறப்படும். அவற்றுள் விட்டவாகு பெயர் விடாதவாகு பெயர் விட்டுவிடாத வாகுபெயர் என்பவையும் அடங்கியுள. இவற்றையே வடநூலார் ஜஹதிலட்சணை (விட்டவாகுபெயர்), அஜஹதி லட்சணை (விடாத வாகுபெயர்), ஜஹதஜஹதி லட்சணை (விட்டுவிடாத வாகுபெயர்) என்பர். இனி, முறையே இம்மூன்று லட்சணைகளையும் விளக்குவாம்.

(1) எங்கு வாச்சியார்த்தம் (ஒரு பதத்தில் அர்த்தஞானத்தை யுண்டு பண்ணும் சாமர்த்தியம் எதுவோ அது சக்தியாம். அந்தச் சக்தியையுடைய அந்தப்பதத்தின் அர்த்தம் (அதாவது பதத்திற்கும் அதன் அர்த்தத்திற்குமுள்ள நேரான சம்பந்தம் சக்தியார்த்தமாம். அச்சக்தியார்த்தமே வாச்சியார்த்தமெனவும் கூறப்படும்) என்று முன்னர் கூறியதை ஞாபகத்திலுய்க்க). முழுவதும் விடப்பட்டு அதனோடு (வாச்சியார்த்தத்தோடு) சம்பந்தமுடைய பொருளைக்காட்டுவது ஜஹதிலட்சணையாம். உதாரணமாக:—

ஒருவன் "கங்கையில் இருக்கிறது அந்தக் கிராமம்" என்கிறான். இதில் கங்கை என்னும் பதத்திற்கு 'நதியின் வெள்ளம்' என்பது வாச்சியார்த்தம். கங்காநதியின் வெள்ளப் (பிரவாகத்)தில் கிராமம் இருத்தலமையாது. ஆகையால் "கங்காப் பிரவாகம்" என்னும் வாச்சியார்த்தம் முழுவதையும் விட்டுக் கரையைக் கொள்ளுதல் வேண்டும். ஆகவே, கங்கை யென்னும் பதத்திற்கு 'கரை'யில் ஜஹதிலக்ஷணை யிருக்கிறது.

(2) வாச்சியார்த்தம் முழுவதையும் விடாமலே அதனோடு சம்பந்தமுடைய வேறு பொருளையும் காட்டுவது அஜஹதிலட்சணையாம். உதாரணமாக:—

ஒருவன் "சிவப்பு ஓடுகிறது" என்று கூறுகிறான். இவ்வாக்கியத்தில் சிவப்பு என்பது வர்ணத்திற்காம். அந்த வர்ணத்தில் ஓடுதல் சம்பவியாது. ஆகையால் சிவப்பு வர்ணமுடைய குதிரை என்று பொருள்படுகின்றது. ஆகவே, சிவப்பு என்னும் பதத்தில் சிவப்பு வர்ணத்துடன் கூடிய குதிரையில் அஜஹறதி லக்ஷணை யிருக்கிறது.

(3) பதத்தின் வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தைவிட்டு ஒரு பாகத்தை மாத்திரம் அறிவிப்பது விட்டுவிடாத லட்சணையாம். உதாரணமாக :—

ஒருவன், ஒருகாலத்தில் சென்னையில் பெரிய வியாபாரியா யிருந்த ஒருவனைச் சில காலத்திற்குப் பின்னர் தஞ்சையில் சன்னியாசியா யிருக்கப்பார்த்தான். பார்த்ததும் இன்னானென்றறிந்து "அவனே இவன்" என்று நிச்சயித்தான். 'அவனே இவன்' என்னும் வாக்கியத்தில் 'அவன்' என்பதற்கு சென்னையில் பத்து வருடங்கட்கு முன் வியாபாரியா யிருந்தவனென்பதும் 'இவன்' என்பதற்குத் தஞ்சையில் இப்பொழுது சன்னியாசியா யிருப்பவனென்பதும் வாச்சியார்த்தமாம். இவ்வாச்சியார்த்தத்தில் விரோதபாக மிருக்கின்றது. எவ்வாறெனின், இறந்த காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும், சென்னைக்கும் தஞ்சைக்கும், வியாபாரத்தொழிலுக்கும் சன்னியாசத்திற்கும் விரோதமிருக்கின்றது. இவ்வாறு இருபதங்களிலும் விரோதமாகவுள்ள வாச்சிய பாகங்களைவிட்டு, விரோதமில்லாத ஆள் மாத்திரத்தைக் கொள்ளவேண்டும். இதுவே ஜஹதஜஹறதி லட்சணை அல்லது பாகத்தியாக லட்சணையாம்.

இதுவரை என்னால் கூடியவரையில் லட்சணையையும் அதன் விதங்களையும் விளக்கினேன். இவற்றை இதுகாறும் அறியாதிருந்தவர்களும் அறிந்து கொள்ளக் கூடுமென்பது எனது நம்பிக்கை. சாத்தியமான வரையில் எளிய நடையிலெழுதி யிருக்கிறேனென்றும் நம்புகிறேன். ஜஹறதி முதலிய லட்சணைகளை விளக்க விசாரசாகரம் என்னும் வேதாந்தக் கிரந்தத்தில் வேறு சில உதாரணங்களும் காட்டப்பட்டிருப்பினும், இவ்வளவே போதுமெனக் கருதி அவற்றை வரையாது விடுத்தேன். இனி இந்த லட்சணை மகா வாக்கியத்தோடு பொருந்து மாற்றினை அடுத்த வியாசத்தில் வரைவல்.

(தொடரும்.)

---

குறிப்பு:—நண்பர்களுக்கு ஓர் விஷயம் கூற விரும்புகிறேன். நுனிப்புல் மேய்ச்சலாக வாசித்து விடுவதால் எதுவும் தெரிந்துவிடாது. அதிலும் இத்தகைய வேதாந்த விஷயங்களை வெகு நிதானமாக மனத்தை ஒரு முகப்படுத்தி ஒவ்வொரு வாக்கியத்தையும்-ஏன்? ஒவ்வொரு எழுத்தையும் பொருள்படுத்திக்கொண்டு வாசிக்கவேண்டும். அவ்வாறு வாசித்தால் செவ்விதிலுணரலாம். விஷயங்கள் நன்கு புலனாகும். ஆகையால் அவ்வாறு வாசித்து விஷய வுணர்ச்சியடையுமாறு கேட்டுக்கொள்ளுகின்றேன்.

# கண்ணம்மாள்

## ஒரு சிறு கதை.

(பண்டித - வி. ராமசாமி.)

அன்றைக்கு நான் ஆபீஸுக்குப் போகவில்லை. தலை "இன்" என்று இருந்ததினால் கச்சேரி வேலை தொந்தரவு என்று வீட்டிலேயே உட்கார்ந்து "கமலாம்பா"ளைப் படித்துக்கொண்டிருந்தேன். "கமலாம்பாள்" நல்ல அபிப்பிராயங்கள் நிறைந்த புஸ்தகமென்றும், ஒரு தரம் அதைப் படித்து எனது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவேண்டுமென்றும் ஒரு நண்பர் கொடுத்தார். புதிய நூல்களின் மீது எனக்குள்ள ஆர்வத்தினாலும் ஸ்நேகிதனுடைய வார்த்தைக்கு நான் வைத்திருந்த மதிப்பினாலும் நான் அந்தப் புஸ்தகத்தைக் கூர்மையாகப் படித்துக்கொண்டிருந்தேன். சாயங்காலம் ஆறு மணி ஆயிற்று. சூரியன் மேக கூட்டங்களில் மறைந்து பகல் ஒளி மழுங்கி மப்பும் மந்தாரமுமாயிருந்தபடியால் எனக்கு நேரமானதே தெரியவில்லை. எனது சங்கதி தெரிந்த கண்ணம்மாள் "ஆரிக்கன் லாந்த"ரைக் கொளுத்திக் கொண்டுவந்து மேஜை மேல் வைத்துவிட்டு "என்ன தம்பி! மருந்து சாப்பிடும் நேரமாய் விட்டது, சாப்பிடு; இப்படிப் படித்தால் தலைப்பாரம் இன்னும் கொஞ்சம் அதிகம் ஆகிறது" என்று சொல்லிக்கொண்டே உள்ளே போய் அவுன்ஸ் கிளாஸையும் மருந்துச் சீசாவையும் எடுத்துக்கொண்டு வந்து என் முன்னால் வைத்தாள். அந்த வார்த்தைகள் காதில் விழுந்தவுடனே நான் மாமூல் பிரபஞ்சத்திற்குள்ளே வந்தேன். "முத்துசாமி ஐயருக்கும் இந்தக் கதி வந்ததா?" என்று சிந்தித்துக் கொண்டே புஸ்தகத்தை மேஜை மேல் வைத்துவிட்டு மருந்து சாப்பிட்டதும் சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டே "ஈஸிச் சேரில்" உட்கார்ந்தேன். என் மனம் பற்பல விதங்களில் போய்க்கொண்டிருந்தது. முடிவாக கிளப்புக்குப் போகலாம் என்று தீர்மானித்தேன். ஆனால் மழைத் தூறலோடு காற்று பலமாக வீசிக்கொண்டிருந்தபடியால் அங்கேயே உட்கார்ந்து விட்டேன்.

"தம்பி! இந்த நேரத்துக்கு என்ன செய்யச் சொல்லுகிறாய். வீட்டிலே சுண்டை வற்றல் இருக்கிறது. வாழைக்காய் பொரியல் செய்திருக்கிறேன். மிளகு ரசம் வைக்கிறேன். மத்தியானம் செய்த தயிர்ப் பச்சடியும் இருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே கண்ணம்மாள் மறுபடியும் வந்தாள்.

"உன் இஷ்டம் போல் செய் என்று தான் சொன்னேனே, எதற்காக சும்மா வந்து வந்து கேட்க வேண்டும்? நீ என்ன செய்தாலும் தேவாமிர்தம் போல் இருக்கிறது. அதனால் உனக்கு எப்பொழுதும் எதையும் சொல்

வதை விட்டு விட்டேன். என்ன செய்தாலும் சரியே...............ஆனால் நான் கேட்டது சொல்ல மாட்டாயா?'' என்றேன்.

"அப்பனே! அந்தப் பேச்சை எடுக்காதே. நான் யாரா யிருந்தால் உனக்கென்ன? இப்பிரபஞ்சமாகிய சம்சார சாகரத்தில் யாத்திரை செய்து கொண்டிருக்கிற நாம் இந்தக் கரைக்கு அடித்துக்கொண்டு வரப்பட்டிருக் கிறோம். நான் ஏதோ உனது சகாயத்தை வேண்டினேன். நீயும் செய் தாய். நீ செய்த இந்தச் சகாயத்தைக் கொண்டு அதற்குத் தகுந்தபடி நடந்து கொள்ள முயற்சி செய்துகொண் டிருக்கிறேன். கடவுள் எனக்கு அந்த விஷயத்தில் கண் விழித்தால் போதும்'' என்று சொல்லிவிட்டு கண்ணம் மாள் புறப்பட்டாள்.

"சம்பளமாவது முன் பின் பரிச்சயமாவது இல்லாமல் பின் என் எங் கள் வீட்டில் வேலை செய்யவேண்டும்?'' என்று நான் கேட்டேன்.

"நான் பணம் சம்பாதிக்க உங்கள் வீட்டுக்கு வரவில்லை.''

"பின்—?''

"உன்னுடைய நல்ல குணம் தெரிந்து உங்கள் வீட்டுக்கு வந்தேன். நீ பரோபகாரம் பொருந்தியவன் என்பதை நான் அறிந்திருக்கிறேன். உன்னை நம்பி யிருந்தால் எனக்கு எந்த விதமான குறைவும் வராதென்பது என் நம்பிக்கை.''

"நான் சாஸ்வதமா என்ன? காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ள வேண்டும். தேக பலம் இருக்கும் போதே பத்துப் பணம் சேர்த்து வைத் துக்கொள். கிழவியாகி கை கால் நடுக்கம் எடுக்கும்போது உன்னை யாரும் ஆதரிக்க மாட்டார்கள்.''

"அட பைத்தியமே! இந்த எண்ணங்கள் எதற்காக உனக்கு? உன் னுடைய முன் ஜாக்கிரதையாவது, சிக்கனமாவது பின்னால் வேலைக்கு உத வுமா? எல்லாம் கடவுள் செயல். இந்த அனாவசியமான வார்த்தைகளும் ஆலோசனைகளும் என்ன பலன் கொடுக்கும்? பொழுது போயிற்று. சமை யல் செய்யவேணும். நான் போகிறேன். நீ எங்காகிலும் போய் டீ, காபி குடித்து பசி இல்லை என்று வராதே'' என்று சொல்லிக் கொண்டு உள்ளே சென்றாள்.

கண்ணம்மாள் விஷயம் எனக்கு மிகுந்த ஆச்சரியமாயிருந்தது. பெண் மிகவும் கருப்பு, அழகில்லை. அவ்வளவு களை கெட்ட கருப்பை நான் எப் போதும் பார்த்ததே இல்லை. அவள் முதலில் எங்கள் வீட்டுக்கு வரும் போது கண்ணெதிரே நிற்காமல் மறைவாக இருந்தால் போதும் என்றுகூடத் தோன்றியது. ஆனால் கஷ்டங்களும் தீராத துன்பங்களும் எப்போதும் ததும்பி நிற்கும்படியான அவளுடைய முகம் எப்பேர்ப்பட்டவர்களையும் இரங் கும்படி செய்யும். இதனாலேயே அவள் வந்து "நான் உங்கள் வீட்டு வேலைக் காரியாகச் சொன்ன வேலை செய்துகொண் டிருக்கிறேன்'' என்று கேட்ட மாத்திரத்தில் நான் மறு வார்த்தை பேசாமல் சரி என்று ஒப்புக்கொண்டு விட்டேன்.

கண்ணம்மாள் வந்த கொஞ்ச நாளிலேயே எனக்குச் சம்பளம் உயர்ந் தது. குழந்தைக்காக வெகு பரிதாபப்பட்டுக்கொண்டிருந்த எனது மனைவி கர்ப்பவதியானாள். ஒரு நாள் கழிந்த மறு நாளிலிருந்தே கண்ணம்

மாளுடைய நற்குணங்கள் ஒவ்வொன்ருக வெளிப்படத் தொடங்கின. முதலில் வந்தபோது முணு முணுத்து வெறுப்புக் குறி காட்டிய என் மனைவி கூட அவள் மீது மிகுந்த அபிமானம் வைத்து ஒவ்வொரு காரியத்துக்கும் அவளுடைய யோசனையையே கைக்கொள்ள ஆரம்பித்தாள். வந்த இரண்டு மூன்று மாதங்களுக்குள்ளேயே கண்ணம்மாள் எங்கள் வீட்டில் சர்வாதிகாரமும் வகித்தாள். குடும்பப் பொறுப்பு பூராவும் அவள் மேல் விழுந்தது. பொறுப்பு அதிகம் ஆக ஆக அவளுடைய சாதுரியம், விநயம், சாமர்த்தியமெல்லாம் நன்ருகப் பிரகாசித்தன. பார்த்தவர்கள் எல்லாரும் "ஆஹா! இவர் எவ்வளவு பெரிய பாக்கியவான்! தங்கம் தங்கமாகக் கொடுத்தாலும் கிடைக்காத மநுஷி அஹஸ்த்மாத்தாய் இவருக்கு சும்மா கிடைத்திருக்கிருள்." என்று கொண்டாடும்படியாக விளங்கினுள். ஆனல் எவ்வளவு தான் சகஜமாகப் பழகி இருந்தாலும் நாங்களும் எவ்வளவு சிரமப்பட்டாலும் கண்ணம்மாள் தன்னுடைய அந்தரங்கத்தை மாத்திரம் வெளிப்படுத்தவே இல்லை.

கண்ணம்மாள் உள்ளே போன பிறகு, இவள் யார்? நமது வீட்டுக்கும் இவளுக்கும் இவ்வளவு சம்பந்தம் ஏற்படக் காரணம் என்ன? இவளுடைய வரலாறு இவ்வளவு ரகஸியமாக இருப்பான் ஏன்? என்று எனக்குள்ளேயே பற்பல விதமாக எண்ணமிட்டுக் கொண்டு எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தேனே தெரியாது. அப்போது ஒரு சந்நியாசி வந்து "ஆண்டவனே! இந்த வேளை தங்கள் வீட்டில் அடியேனுக்கு அமுது அளிக்க ஏற்பாடு செய்யலாமா?" என்று கேட்டார்.

"சரி ஆகட்டும்" என்று அவரிடம் சொல்லிவிட்டு உள்ளே போய் கண்ணம்மாளுக்கு அந்தச் சங்கதியைத் தெரிவித்துவிட்டு வந்து நாற்காலியில் உட்கார்ந்தேன்.

அந்தச் சந்நியாசியைப் பார்க்காமல் நான் எதையோ யோசித்துக் கொண்டிருந்தேன். அவர் பத்து நிமிஷம் அப்படியே நின்று கொண்டிருந்து விட்டு பிறகு பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தார். அவருடைய செயல் எனக்கு வியப்பைக் கொடுத்தது. ஒரு சிகிரெட்டைப் பொருத்திக் கொண்டு நான் அவர் பக்கம் திரும்பி உட்கார,

'உன் பேர் என்ன?' என்று அவர் என்னைக் கேட்டார்.

'ராமகிருஷ்ண பிள்ளை'

'தகப்பனுர் பெயர்'

'வீராசாமி பிள்ளை'

'உங்களுக்கு எந்த ஊர்?'

'கோயமுத்தூர் ஜில்லா ஆனைமலை'

'இங்கே என்ன வேலை?'

'அக்கௌண்ட்டெண்ட் பிரான்ச்சில் 120 ரூபா கொடுக்கிருர்கள்'

'தகப்பனுர் எங்கிருக்கிருர்?'

'தகப்பனுரும் தாயாரும் இல்லை'

'சிறிய தகப்பனுர் யாராவது இருக்கிருர்களா?'

'ஓம், ஒருவர் தான். அவரும் சென்னையில் வக்கீலாயிருந்து காலஞ்சென்று விட்டார்'

‘அவருடைய மனைவி மக்களோ?’

‘அவர் மனைவியை வேண்டாமென்று துரத்தி விட்டார். குழந்தைகள் இல்லை. மனைவி கொஞ்ச காலம் பிறந்த வீட்டில் இருந்தாள். பிறகு தற்கொலை செய்து கொண்டாள்’ என்று சொல்லிக் கொண்டே தலையை யேலெடுத்துப் பார்த்தேன். சந்நியாசி சாமானிய சந்நியாசி அல்ல. அவருடைய முகத்தில் வித்தியா தேஜஸ் தாண்டவமாடிக்கொண் டிருந்தது.

“தாங்கள் பூர்வாசிரமத்தில் யாரோ?”

‘யாரா யிருந்தால் என்ன ஆண்டவனே? ஒரு பாவாத்மா. ஞானத்தில் இச்சை கொண்டவனுகி தேசாந்திரியாகத் திரிகிறேன்.”

‘இந்த மாதிரி யாத்திரை செய்வதில் தங்கள் உத்தேசம் என்ன?’

‘இந்த ஜகத் முழுவதும் அந்தர்யாமியாய் வியாபித்திருக்கிற சக்தி சொரூபத்தைக் காண வேண்டும் என்ற ஆசையோடு குமரி முதல் இமயம் வரை அலைந்துகொண் டிருக்கிறேன். உன்னைப் போன்ற உத்தம புருஷர்கள் அன்புடன் ஆதரித்தால் ஒரு வேளை உண்பேன். இல்லாவிட்டால் எத்தனை நாளானுலும் உபவாசமாகவே இருந்து விடுவேன்.’

‘தங்களைப் பார்த்தால் நல்ல சம்பத்து உடையவர்கள் போல் தோன்றுகிறது. இப்படிச் சந்நியாசிக் கோலங் கொண்டு திரிவானேன்?’

‘பாவத்தைப் போக்கிக் கொள்ள என்று சொல்ல வில்லையா?’

நான் அவரைப் பார்த்தேன். அவருடைய கண்களில் தோன்றிய கம்பீரம், சாந்தம், துக்கம் எல்லாம் ஒன்று சேர்ந்து மின் வெட்டுப்போல் என் கண்களில் தாக்கியது. உடனே ஒரு விதமான சோர்வு கொண்ட முகமுடையவன் ஆனேன்.

“சமையலாகி விட்டது அப்பனே! அந்தச் சந்நியாசியை எழுந்திருக்கச் சொல்லி நீயும் வந்து சாப்பிடு” என்று கண்ணம்மாள் உள்ளே இருந்து சொன்னுள். அவளுடைய வார்த்தை கேட்ட சந்நியாசி தன்னை மறந்து உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பூர்வ நினைவு என்னமோ வந்தது போல் ஆலோசிக்கத் தொடங்கினுர். நான் சொன்னது ஒன்றும் அவருக்குத் தெரியவில்லை.

***

பலகை போட்டு பாத்திரத்தில் நல்ல தண்ணீர் வைத்து சந்நியாசியைச் சாப்பாட்டுக்கு உட்காரச் செய்தேன். கண்ணம்மாள் பரிமாறினுள். சந்நியாசி பேசாமல் சாப்பிட்டுக்கொண் டிருந்தார். சாப்பாட்டு வேளையில் மௌனம் சாதிப்பது வழக்கமோ என்னவோ என்று நானே நினைத்துக் கொண்டேன். பாதி உணவு முடிந்தது. அப்போது அவர் தலை நிமிர்ந்து கண்ணம்மாளைப் பார்த்து,

‘லேசானது ஏதாவது இருக்கிறதா?’ என்று கேட்டார்.

‘ரஸ மிருக்கிறது’.

‘அமிர்தக் கை அம்மா உன்னுடைய கை! பதார்த்தங்களெல்லாம் வெகு சுகம். இவர் உனக்கு என்ன ஆகவேணும்?’

கண்ணம்மாள் பேசவில்லை. அவருடைய கேள்வி எனக்குக்கூட அநாவசியம் என்று பட்டது. அந்த வார்த்தையைக் கேட்டு கண்ணம்மாள் லஜ்ஜையாக நின்றுகொண் டிருந்தாள்.

'நீ இப்போது இப்படி இருக்கிறாயே என்? என்று அவர் கேட்டார்.

கண்ணம்மாள் மறுபடியும் கொஞ்சம் லஜ்ஜை கொண்டாள் என்றாலும் கொஞ்சம் தைரியங் கொண்டு,

'நான் எப்போதும் இப்படித்தான்' என்றாள்.

'அல்ல எனக்கு தஞ்சாவூர் ஜில்லாவில் பழக்கம் உண்டு. உன்னுடைய பழைய வரலாறு எனக்குத் தெரியும்.'

'தெரிந்தால் என்னை அவ்வளவு கேள்விகள் கேட்பானேன்?' என்றேன் நான்.

'நீ உண்மை சொல்லுவாயோ சொல்ல மாட்டாயோ என்று பார்த்தேன். அதுபோலவே இங்கேயும் கேட்டேன். உண்மை வரவில்லை.'

அந்த வார்த்தைகள் எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்கின. உண்மையில் இவருக்கு இவளுடைய சங்கதிகள் தெரியும்; சொன்னால் நன்றாக இருக்கும் என்று நினைத்தேன். அது நல்லதோ கெட்டதோ? கெட்டதா யிருந்தாலும் இன்னது என்று தெரிந்து கொள்ளுவது நல்லதல்லவா? என்று நினைத்தேன்.

'நீ நல்ல குணவதி. உன்னுடைய வரலாறு சொல்லிக் கொள்வதற்கு நீ என் வெட்கப்பட வேண்டும்?' என்று சந்நியாசி கண்ணம்மாளைப் பார்த்துச் சொன்னார். கண்ணம்மாளுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. நின்றது நின்றவாக்கில் அப்படியே சுவரோடு சேர்ந்து விட்டாள். அவளுடைய முகத்தைப் பார்த்த மாத்திரத்தில் எனக்கு விசனம் உண்டாகி விட்டது. இந்தச் சந்நியாசி அவளுடைய மனதை ஏன் நோகச் செய்யவேண்டும் என்று எனக்கு அவர் மீது ஆத்திரங் கூட வந்தது.

'ஐயா! இந்த திக்கற்ற பாவியினுடைய வாழ்க்கையானது துக்க சாகரத்திலேயே மூழ்கி, பிறர் காதுக்கு எட்டாமல் கேள்வி முறை யின்றிப் போக வேண்டியதே. அதைத் திருப்பித் திருப்பிக்கேட்டு துன்ப மிகுதியை உண்டாக்குவானேன்? உங்களுக்கு அநேக புண்ணியம். அதைக்கேளாதீர்கள். அதெல்லாம் நான் மறந்தே போய் விட்டேன்.'

'நீ மறக்கலாம். உலகம் மறந்து விடாது. மறந்தால் தனது உத்தம வழிகாட்டியை-ஆதர்சத்தை அது இழந்து விட்டதே யாகும்' என்று அவர் சொல்லும்போதே கண்ணம்மாளின் சரித்திரம் கேட்டுத் தீரவேண்டும் என்ற ஆசை என் மனதில் பொங்கிற்று. அவர் சொல்லத் துணிந்ததும் நல்லது தான் என்று நான் தீர்மானித்தவுடனே அவரை வர்புறுத்தத் தொடங்கினேன். கண்ணம்மாளுக்கு மாத்திரம் கொஞ்சங் கூடப் பிரியமில்லை. நான் வற்புறுத்தி வற்புறுத்திக் கேட்க சந்நியாசியும் சொல்ல ஆரம்பித்தார்.

'அப்பனே! இவள் கண்ணம்மாள் அல்ல. ஒரு பிரபு வீட்டுப் பெண். செல்வத்திலே பிறந்து செல்வத்திலே வளர்ந்தவள். தாய் தந்தையருக்கு ஏகபுத்திரி ஆனதாலே நல்ல வரனுக்காக அலைந்து அலைந்து கடைசியில் ஒரு பி. ஏ. படித்த வாலிபனுக்குக் கொடுத்து விட்டுக் காலஞ் சென்றார்கள். வரதக்ஷிணை ஸ்ரீதன வரிசைகளுக்குக் குறைவில்லை. ஏராளமாகச் செய்திருந்தார்கள். சுருங்கக் கூறுமிடத்து சகல வரிசைகளும் எவ்வளவு சிறப்பாகச் செய்யவேண்டுமோ அவ்வளவும் செய்திருந்தார்கள். ஆனால் தானொன்று நினைத்தால் தெய்வமொன்று நினைப்பது சகஜந்தானே. மாய்

பிள்ளை சென்னையில் வக்கீல் வேலையில் தலையிட்டார். அங்கேயோ சொல்ல வேண்டியதில்லை. துஷ்ட சகவாசம், குடி, முண்டைகள், ஸ்போர்ட்ஸ் களைப் முதலியவற்றில் ஐயா மயங்கிவிட்டார். பெண்டாட்டி என்றால் ஏறெடுத்துக் கூடப் பார்ப்பதில்லை. கண்ணுக்கு முன்னால் இவள் வந்தாலே ஒரு வெறுப்பு. ஆனால் இந்தப்பெண் எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு வெகு காலம் கஷ்டப்பட்டாள். அடித்தாலும் வைதாலும் சாப்பாடு போட்டாலும் போடாவிட்டாலும் சும்மா இருந்து விடுவாள்.

'நல்ல கெட்டிக்காரன்! எங்கள் சிற்றப்பனுக்கு அண்ணன் போலிருக்கிறது. இவர்களுக்கு ஏன் இந்தப் பாழும் படிப்பு?' என்று நான் ஆத்திரத்தோடு சொன்னேன். எனக்கு துக்கம் பொங்கிற்று. கண்ணம்மாளுக்கு மாத்திரம் இந்த வார்த்தைகள் வெகு தொந்தரவா யிருந்தது.

'ஐயா சகல தப்பும் என்னாலேயே. அதனாலேதான் அவர் என்னைத் தண்டித்தார். அவர் என்ன ஒன்றுந் தெரியாதவரா?'

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே சந்நியாசிக்கு முகஞ் சிவந்து விட்டது. எல்லாந்தெரிந்தவர் முகத்தில் நெருப்பை வாரிப்போடு! நீ சின்னக் குழந்தை அல்லவா அப்போது? தமக்கு இருந்த அறிவு அநுபவம் உன்னிடத்தில் இருக்காது என்று தெரிந்துகொள்ள வேண்டாமா? உன்னால் தப்பு இருந்தால் நல்ல விதமாகத் திருத்த வேண்டும். அவ்வளவே அல்லாமல் கேவலம் மாடுபோலவா நடத்துவது? இருபத்தைந்து வயதுக்கு மேலான ஒரு ஆண்பிள்ளை 15, 16 வயதுள்ள விளையாட்டுக் குழந்தையை எப்படி நடத்த வேண்டும்? அவள் என்ன செய்வாள்? என்கிற புத்தி வேண்டாம்?' என்று சந்நியாசி அசாத்திய கோபங் கொண்டு சொன்னார். அவருடைய வேதனையைக் கண்டு எனக்குக் கூட கோபம் வந்தது.

'நன்றாக ஆலோசித்தே செய்தார். எத்தனையோ தரம் சொல்லிப் பார்த்தார். அவர்மேல் தப்பில்லை. குற்றம் அவ்வளவும் என்னுடையதே. அவருக்குத் தகுந்த சம்சாரம் அல்ல நான்'' என்று கண்ணம்மாள் துக்கத்தால் கம்மிய குரலோடு சொல்ல ஆரம்பிக்க,

'அந்தப் பேச்சு உண்மை. மாட்டுக்கு ஒணானை ஜோடி சேர்த்த மாதிரி தான் உங்கள் இல்லறப் பொருத்தமும். எப்படியோ இந்த மாதிரி வாய்த்து விட்டது. அதற்காக என்ன செய்ய வேண்டும்? உன்னை எத்தனை விதங்களில் ஹிம்சிக்க வேண்டுமோ அத்தனை விதங்களிலும் ஹிம்சிக்க வில்லையா? சாட்டையால் வளாச வில்லையா? அறையில் தள்ளிப் பூட்டிக் கொண்டு கடுங்காவல் தண்டனைக் கைதிகளுக்குக் கொடுப்பது போல் மண் செப்பில் தண்ணீரும் ஓட்டில் சோறும் போட்டுக் கொடுக்க வில்லையா? ஒரு நாள் தொண்ணைத்தடியால் அடிக்க உன் மண்டை உடைந்தது ஞாபகம் இருக்கிறதா? அப்பொழுதும் டாக்டரிடத்தில் என்னென்றாய்? அட்டாலி மேலிருந்து விறகு விழுந்தது என்றல்லவா சொன்னாய்.?—'

எனக்கு இந்த வார்த்தைகள் கேட்டவுடனே மனம் துடி துடித்தது. காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றினது போலிருந்தது. ஆக்கிரோஷத்தோடு கூடின ஒருவிதமான ஆவேசம் கிளம்பியது. 'ஸ்வாமீ! இந்தப் படித்தவர்கள் செய்கிற இழவெல்லாம் எங்கு பார்த்தாலும் இப்படியே' என்று என்னை அறியாமல் சொன்னேன்.

'எல்லாரும் அப்படியா அப்பனே? படித்த மூட்டாள்கள் எங்கும் சிலர் உண்டு. இதெல்லாம் திருவருட் செயல். முன்பின் ஆராயாமல் படித்தவர்களே வேண்டும் என்று செய்கிற சம்பந்தங்களின் கதியெல்லாம் இப்படித் தான். தவிர, ஒன்றும் அறியாத பச்சைக் குழந்தைகளைக் கலியாணம் செய்து கண்ணாரக் கண்டு சந்தோஷப்பட வேண்டும் என்கிற பைத்தியக்காரத்தன மான ஆசை பெரியவர்களுக்கு இருக்கிறவரை இந்த மாதிரித் தொல்லைகள் இருந்தே தீரும். இரவும் பகலும் ஆனந்தக் கனவுபோல் சுகமாகக் கழிய வேண்டிய இளமை இவ்வளவு அலக்கழிப்பில் முடிகிறது!'

எனக்கு அந்த வார்த்தைகள் எல்லாம் உண்மையென்று பட்டது. எங்கு பார்த்தாலும் இந்த விவகாரங்களே. "ஆமாம் ஸ்வாமீ! ஆமாம்! இப்பேர்ப்பட்டவர்களை எத்தனையோ பேர்களைப் பார்த்து வருகின்றோம்" என்று நான் சொன்னேன்.

"ஐயா! நான் குரூபி. என்னுடைய லட்சணக் குறைவையுங் கூடப் பாராமல் அன்புடனேயே நடத்தினார் என் நாதர். எப்படிப்பார்த்தாலும் என்னுடைய பர்த்தாவின் அந்தஸ்துக்கு நான் பொருத்தம் உள்ளவள் என்று சொல்ல முடியாது. நான் ஒரு பாவி. அதனாலேயே அவர் எனக்குத் தக்காமல் போய் விட்டார். குற்றம் அவ்வளவும் என்னுடையதே" என்றாள் கண்ணம்மாள். புருஷன்மீது அவளுக்கிருந்த அபிமானம் எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. மறுபடியும் அந்தச் சந்நியாசி "கிடையவே கிடையாது. நீ உண்மையை மறைக்கிறாய். உன்னுடைய களங்கமற்ற நடவடிக்கை, பொறுமை, தைரியம் ஆகியவை இப்பொழுது அந்த வீட்டில் உருவங்கொண்டு விளங்குகின்றன. ஒரு நாள் உன் புருஷன் நீ கூடத்தில் படுத்திருந்த போது உனது கூந்தலைச்சுருட்டிப் பிடித்துக்கொண்டு டெஸ்டமோனாவை ஒதெல்லோ கொன்றதுபோல் கொன்று விடுகிறேன் என்று உன்னை நொறுக்கவில்லையா? மூச்சு விடாமல் அடங்கிக் கிடந்தாயே யொழிய யாரிடமாவது சொன்னாயா? பயங்கரமான இடி மின்னலோடு வானம் பொத்துக் கொண்டதுபோல் ஒரே அடியாக மழை பெய்து கொண்டிருந்த காலத்தில் உன்னை வெளியில் பிடித்துத் தள்ளி இரண்டு நாள் வீட்டுக்குள் விடவில்லையே இது ஞாபகமா உனக்கு? உன் கணவர் என்ன நல்லவரா? அவர் பேரைக் கேட்டால் உன் வயிறு எரியவில்லையா?"

"என்னமோ என்னுடைய புத்தி குறைவாலே அவருக்கு வெறி உண்டாக்கிக் கொண்டிருந்தேன். இல்லாத போனால் படித்தவர்கள்—பத்துப் பெரிய மனுஷாளோடு பழகுகின்றவர்கள் அப்படிச் செய்வார்களா? அவரைச் சொல்வதில் என்ன லாபம்?"

"ஆமாம்! அவரைச் சொல்வதில் லாபம் என்ன? இந்த மாதிரியாக ஒரு பெண்பிள்ளையை ஒரு ஆண் பிள்ளை என்கிறவர் கண்ணீரும் கம்பலையுமாய்

அலேயச் செய்தால் வாயை மூடிக்கொண்டிருக்கிற சமூகத்தைச் சொல்ல வேண்டும்'' என்று நான் கூறினேன்.

'அது தப்பு. நமது சமூகத்தில் பெண்களுக்கே பெருமை கொடுக்கப் பட்டிருக்கிறது. ஆங்காங்கு அப்பொழுது அப்பொழுது அநியாயம் நடக்கிறது உண்மையே யானாலும் அது மிகவும் அரிது' என்று கண்ணம்மாள் சொன்னாள்.

'அரிதா யிருந்தால் இருக்கட்டும். படித்தவர்க்கு இந்த மாதிரி புத்தி இருப்பது தப்பு. உன்னை ஏன் அவர் அப்படிச் செய்யவேண்டும்? நீயோ சுகத்திலே பிறந்து வளர்ந்தவள். உனக்கேன் இந்த அவஸ்தை வரவேண்டும்?' என்று நான் சொன்னேன்.

'அப்பனே! இந்தப் பெண் படாத கஷ்டங்கள் பட்டாள். பிறகு புருஷன் வேண்டாமென்று துரத்திவிட்டபடியால் பிறந்த வீட்டுக்கு அழைத்துக் கொண்டு சென்றார்கள். ஆனால் அங்கே தாய் தந்தையரின் துக்கத்தைக் கண்டு சகிக்க மாட்டாமல் யாரோ யாத்திரீகர்களுடன் வெளியேறி விட்டாள். வழியில் என்னவோ காரணத்தால் பழைய உருவம் மாறி இந்த விகார உருவங் கொண்டிருக்கிறாள். மறுபடியும் வீட்டுக்குப் போகாமல் உன் வீட்டுக்கு வந்து சேர்ந்திருக்கிறாள்'' என்று சொல்லிவிட்டு எழுந்து சந்நியாசி கை அலம்பிக் கொண்டார்.

கண்ணம்மாள் கண்களினின்றும் நீர் மாலை மாலையாக வடிந்து கொண்டிருந்தது. பழைய விருத்தாந்தங்களின் நினைவு அவளுடைய மிகுந்த துக்கத்துக்குக் காரணமா யிருந்தது. இந்தச் சரித்திரத்தைக் கேட்ட நான் பிரமித்துப் போய் விட்டேன். அவளுடைய பேரும் ஊரும் மாத்திரம் எனக்கு இன்னும் தெரியவில்லை.

'ஐயா! அவர் எங்கிருக்கிறார் என்று சொல்லுங்கள் தயவு செய்து' என்று கண்ணம்மாள் கண்ணீர் துடைத்துக் கொண்டு கேட்டாள். அந்தச் சந்நியாசி குரலைச் சரிப்படுத்திக் கொண்டு,

'அந்தப் பாவி எங்கேயோ தேசாந்தரம் சுற்றிக்கொண்டிருக்கிறான். அளவு கடந்த போகத்தால் உடல் நலம் கெட்டு விட்டது. அந்தக் காலத்தில் நமது மனைவியை அநியாயமாகப் படாதபாடு படுத்தினோமே என்று தன் குற்றத்தை உணர்ந்து உன்னை எங்கெங்கு தேடியும் கண்டுபிடிக்க முடியாமல் கடைசியில் தனக்குள்ளதை எல்லாம் உன்பேருக்கு எழுதி வைத்துவிட்டுச் சந்நியாசியாகத் திரிகிறான். அந்தப் பாவியின் வார்த்தை இப்போது நமக்கு எதற்காகும்?' என்றார். கண்ணம்மாள் இந்த வார்த்தைகளைக் கேள்விப்பட்டவுடனே துக்க வெள்ளத்தில் மூழ்கி அப்படியே கீழே சாய்ந்து மூர்ச்சையானாள். சந்நியாசி அவளைக் கீழே ஒழுங்காகப் படுக்கவைத்து முகத்தில் தண்ணீர் தெளித்தார். கொஞ்ச நேரங் கழித்து ஸ்மரணை வந்தது. சந்நி

யாசி அவளைப் பார்த்து "சுந்தரம்!—" என்று என்னமோ சொல்லத்தொடங்கும்போது அவள் "அம்மா!" என்று அப்படியே மறுபடியும் குப்புற விழுந்துவிட்டாள். சந்நியாசி 'என்னமோ' என்று சந்தேகங் கொள்ள, நான் அவளைப் பிடித்துக்கொண்டிருந்தேன். இந்த அநாவசியமான பிரசங்கம் வந்து இவளுக்கு இவ்வளவு வேதனை உண்டாக்கி விட்டதே என்று நான் விசனப்பட்டேன். அவள் மறுபடியும் சிறிது தெளிந்து "நீங்கள் ஏன் இப்படி ஆகிவிட்டீர்கள்? என்னாலே உங்களுக்கு எவ்வளவு துன்பங்கள் நேர்ந்துவிட்டன? இந்தப் பாவியை அல்லாமல் வேறு ஒருத்தியைக் கலியாணம் செய்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருப்பீர்கள். அப்பனே இவர் உன்னுடைய சிற்றப்பா" என்று சொல்லிக் கொண்டே அவருடைய பாதங்களில் வீழ்ந்து கோவென்று கதறினாள். "தம்பீ! நான் துரைசாமியில்லை. நீ என்னைப் பார்த்து அநேக காலமாயிற்று. அதனால் உன்னால் அடையாளங் கண்டு கொள்ள முடியவில்லை" என்று சொல்லிக்கொண்டு கண்களில் நீர் ததும்ப அவளை எழுந்திருக்கச் செய்து "சுந்தரம்! நீ அபூர்வ மாணிக்கம். உன்னுடைய நற்குணங்கள் இப்போது எவ்வளவோ பிரகாசிக்கின்றன! எனக்கு புத்தி வந்து உன்னைத் தேட ஆரம்பித்தேன். கண்டு பிடிக்க முடியவில்லை. சுற்றுகிறேன் எல்லா நாடுகளிலும். காலையில் இந்த வீதி வழியே போகும் போது நீ சுண்டைக் காய்க் கூடையைக் கூப்பிட்டாய். உன்னுடைய தொனியாக இருந்தது. என்றாலும் நேரில்கண்டு நிச்சயம் செய்து கொள்ளலாம் என்று வந்தேன். அடையாளத்தால் இவன் எனது அண்ணாவின் பிள்ளை என்பதைத் தெரிந்து கொண்டு ஆனந்தத்தில் மூழ்கி விட்டேன். அப்பனே இங்கே உன்னுடைய அம்மாள் பக்கத்திற்கு வா" என்று என்னுடைய அப்பா என்னைப் பக்கத்தில் சேர்த்துக் கொண்டார். அந்தச் சந்தர்ப்பத்தில் என்னுடைய இருதய கமலத்தில் தாண்டவமாடிய பாவங்களை வெளிப்படுத்த என்னால் இயலாது.

### பேசுவது சுலபம் பட்டுப்பார்த்தால் தெரியும் அந்த சுகம்.

'மனைவிக்கு பயந்தவன்' என்று கேலி பண்ணுகிறார்கள். பேய்களைத் தெரியாமல் கட்டியழ நேர்ந்துவிட்டால் மானஸ்தர்கள் என்ன செய்வார்கள் பாவம்? நான்குபேர் சிரிக்காமல் இருக்க தான் ஒதுங்கிப் போகவேண்டியிருக்கிறது. பட்டவனுக்குத்தான் தெரியும் அந்த கஷ்டம். எதுவும் பேசுவது சுலபமே! தன்னை அந்த ஸ்தானத்தில் வைத்துப்பார்த்தால்தான் உண்மை தெரியும்.

# "எனது பாலிய ராமாயணம்"

அல்லது

## "தாய் தந்தையரிடம் நான் கற்ற கல்வி"

(எஸ். சையத் அஹ்ம்மது முன்ஷி.)

எனது மாசிலா வாழ்நாட்கள்—எனது இருதயம் பரிசுத்தமாய் இருந்த நாட்கள்-எனது ஆனந்த நாட்கள்-நான் யாவருக்கும் மன்னனாய் விளங்கிய நாட்கள், நான் தூரிக் கட்டிலில் படுத்து எனது கட்டைவிரலை வாயில் வைத்து அதிலிருந்து அமிர்தம் ஊறுவதைப் போலுணர்ந்து அதைச் சுவைத்துகொண்டிருந்த காலமேயாகும். நான் தாமரை இலைத் துளிபோலவும் மோதிரத்திலுள்ள வைரக்கல்லைப் போலவும் விளங்கினேன். யாவரும் என்னை ஆவலோடு வாரியெடுத்து மார்போடணைத்து நெற்றியில் முத்தமிடும் பாக்கியத்தைப் பெற்றிருந்தேன். எல்லோருடைய மனதையும் களிப்பூட்டும் கருவியாக விளங்கினேன். விசனமின்றி வயிறு நிறையப் பால் அருந்திவந்தேன். ஒரு மிருதுவான வஸ்து (காற்று) என்னோடு வந்து விளையாடி என்னைக் களிப்பூட்டும். எனது மிருதுவான சிகையை அலங்கோலப்படுத்தும். எனது அழகிய அங்கியை பறக்கவைக்கும். நான் ஆனந்தத்திலாழ்ந்து என்னை யறியாது கண்களை மூடிக்கொள்வேன். பிறகு எனக்கு ஒன்றும் தெரியவராது.

அந்நாட்கள் கழிந்தன. எனது செய்கைகளில் மாசுபடிய ஆரம்பித்தது. சிறிது தவழ ஆரம்பித்தேன். என்முன் தோன்றும் வஸ்துக்களை அருகில் இழுத்துப்போட்டு என்னதாக்கிக் கொள்ள முயன்றேன். எனது தாய் என்னை மெத்தைமீது கிடத்திச் சுற்றிலும் மிருதுவான சிறு தலையணைகளை வைத்து இங்குமங்கும் செல்லாதவாறு செய்வாள். நானோ அதற்கு இணங்குபவன்? தாய் எழுந்து காரியார்த்தமாய்ச் சென்றவுடன் எனது சிறைச்சாலைக் கோட்டைகளைச் சின்னாபின்னப்படுத்தி தரையில் தவழ்ந்து சென்று அங்கியை அழுக்காக்கிக் கொள்வேன். கீழே கிடக்கும் வஸ்துக்களைப் பொறுக்கி வாயில் போட்டுக்கொள்வேன். தாய் திரும்பி வந்து என்னை அன்பு நிறைந்த கோபப்பார்வையால் பார்த்து கன்னத்தில் ஒரு செல்ல அடி அடிப்பாள். இது என்னால் பொறுக்க முடியாது. கீழ் உதட்டை தொங்கவிட்டு அழ ஆரம்பிப்பேன். இதைக் கண்டதும் தாயாருக்கு மனம் சகியாது. "அப்—பா இல்லை அப்—பா அழாதே அப்—பா என் தங்—கம்" எனக்கூறி தேற்ற ஆரம்பிப்பாள். நான் சிறிது சாந்தமடைவேன். பல

வஸ்துக்களையும் சுட்டிக்காட்டிச் சந்தோஷத்தை உண்டாக்குவாள். மார்போடணைத்து முத்தமிடுவாள்.

மெள்ள எழுந்து நிற்கவும், சுவரைப் பிடித்துக்கொண்டே நடக்கவும் கற்றுக்கொண்டேன். எனது தாத்தா வந்து என்னை மடியில் எடுத்து முத்தமிடும்பொழுது அவர் தாடியையும் மீசையையும் எனது சிறுகைகளால் இறுகப்பிடித்துக்கொண்டு அவர் "அடா—டா விடுவிடு" என்று கதறும் வரை விடமாட்டேன். பிறகு அவர் "போக்கிரிப்பயல், சண்டிப் பயல்" என முணு முணுப்பார். இதைக் கண்டு அனைவரும் நகைப்பார்கள். அப்படியே செய்ய மேலும் மேலும் என் மனம் தூண்டும். நன்றாய் நடக்கப் பழகியவுடன் எனது தாய் தந்தையர் என்னை மகிழ்விக்கும் நோக்கம் கொண்டு தன்னுடன் பேசிக்கொண் டிருப்போரைச் சுட்டிக்காட்டி அவர்களை அடித்து ஓடி வந்துவிடும்படி, தூண்டுவார்கள். நான் உற்சாகத்துடன் ஓங்கி ஓங்கி அடிப்பேன். இவ்விதம் தாய் தந்தையரின் சம்மதத்தின் பேரிலேயே பெரியோர்களையே அடிக்கப் பழகியவன் என்னைப்போன்ற சிறுவர்களை விடுவேனு? பளீர் என என்னுடன் விளையாடுவோர்களை அறைந்துவிட்டு வீட்டிற்குள் ஓடிவந்து விடுவேன். அடிபட்டவனின் தாய் வந்து கேட்டால் என் தாய் அவளுடன் வாக்குவாதம் செய்து விரட்டிவிடுவாள். இச்செய்கை எனக்கு இன்னும் அதிக உற்சாகத்தை யுண்டாக்கும்.

சில சமயங்களில் அண்டை வீட்டிற்குச் சென்று அங்குள்ள நாய்க்குட்டிகளின் காதுகளைப் பிடித்துத் தூக்குவேன். அவை "வாள் வாள்" என்று சத்தமிடவே அவ்வீட்டுப் பெண்கள் வந்து என்னை அடித்து வீட்டிற்கு விரட்டிவிடுவார்கள். நான் அழுதுகொண்டு தாயிடம் சொல்வேன். தாய் என்னை அடித்தவர்களைப் பார்த்து தூஷித்துவிடும்படி கூறி சில வசை மொழிகளைச் சொல்லிக்கொடுப்பாள். நான் அழுதுகொண்டே அவைகளை உச்சரிப்பேன். அதிலிருந்து திட்டுவதற்குப் பழகிக்கொண்டேன்.

அளவுக்கு மீறிய அன்பினுல் எனக்குப் பலவித தின்பண்டங்களும் விளையாட்டுக் கருவிகளும் வாங்கிக் கொடுப்பார்கள். நான் அவை போதாதென மற்ற பையன்கள் வைத்திருக்கும் பண்டங்களைப் போன்றவைகளை வாங்கித் தரும்படி பிடிவாதம் செய்வேன். கொஞ்சநேரத்தில் நான் கோரிய வஸ்துக்கள் எப்படியாயினும் வந்துவிடும். இதிலிருந்து பணமிருப்பினும் இல்லாவிடினும் பிடிவாதம் செய்தால் கோரிய வஸ்துக்கள் கிடைக்குமென்பதை அறிந்துகொண்டேன். அதற்குப் பிறகு ஏதாவது வஸ்துவைக் கோரி அழும்போது யாராவது வந்து தேற்றுவார்களே யாகில் எனது பிடிவாதம் அதிகரிக்கும். எனது தாய்தந்தையர் எதை வேண்டா மென்பார்களோ அதையே செய்வேன். சேற்றில் இறங்கி விளையாடி உடுப்பைக் கெடுத்துக்கொண்டு சேற்றுக்காலோடு வீடு முழுவதும் சுற்றுவேன், தாய் கோபங்கொண்டு அடிப்பாள். தந்தையிடம் அழுதுகொண்டு சொல்வேன். தந்தை

தாயைப் பார்த்து அதட்டுவார். நானும் தாயைப் பார்த்து விரலைக்காட்டி "ஜாக்கிரதையாய் இரு" என சைகை செய்வேன். சில சமயங்களில் தாயே மற்றவர்களுக்காக கற்றுக்கொடுத்த வசைமொழிகளையும் உபயோகிப்பேன். தந்தை அப்படிச் செய்ய மீண்டும் தூண்டுவார். ஆ! பிற்காலத்தில் தாயை துரும்பென மதித்து தூஷிக்கவும் அடிக்கவும் அச்செய்கையே காரணமாய் இருக்குமென்பதை தந்தை அறியார். தாயும் தான் மற்றவர்களுக்காக கற்றுக் கொடுத்த வசைமொழிகள் தனக்கே வந்துசேரும் என்பதையும் அறியாள்.

எனது தந்தை "சிகரெட்" எப்பொழுதும் குடித்துக்கொண்டே இருப்பார். சில சமயங்களில் நாற்காலியில் உல்லாசமாய் உட்கார்ந்துகொண்டு சிகரெட் குடிக்கும்பொழுது நான் உற்று நோக்கிக்கொண்டிருப்பேன். எனக்கும் அவ்விதம் உட்கார்ந்து புகையை விட்டுக்கொண்டிருக்க ஆசையுண்டாகும். பகல் இரண்டு அல்லது மூன்று மணி சுமாருக்கு தந்தை வேலைக்குச் சென்றிருப்பார்; தாய் ஓரிடத்தில் உட்கார்ந்துகொண்டு ஏதாவது தைத்துக்கொண்டிருப்பாள். தாய்க்குத் தெரியாமல் ஒரு காகிதத்தைச் சுருட்டி சிகரெட்டைப்போல் செய்துகொண்டு தந்தை சிகரெட்டைப் பற்றவைப்பதுபோலவே பற்றவைத்து நாற்காலியில் சாய்ந்துகொண்டு "உப், உப்" என புகையை விட்டுக்கொண்டிருப்பேன். கொஞ்ச நேரத்தில் எனது உதடுகளும் நாக்கும் எரிய ஆரம்பிக்கும். சில சமயங்களில் காகிதம் பற்றிக்கொண்டு கையையும் உதடுகளையும் சுட்டுவிடும். இதனால் காகிதத்தில் செய்வதை விட்டுவிட்டு தந்தையிடமுள்ள சிகரெட்டுகளை எங்ஙனமாயினும் திருடிக் குடிக்க யோசித்தேன். ஓய்வு நாட்களில் தந்தை தன் மேலங்கியை தூக்கில் தொங்க விட்டுவிட்டு இடைவேளை போஜனத்திற்குப் பின் சிறிது களைப்பாரத் தூங்கிவிடுவார். தந்தையின் சட்டைப் பையில் வேறு ஏது இல்லாமற் போயினும் உதிர்ந்த புகையிலையும் சிகரெட் பாக்கெட்டுகளும் நெருப்புப் பெட்டியும் அவசியம் இருக்கும். எனக்குச் சட்டைப்பை எட்டாது. ஒரு தலையணையையாவது சிறுபெட்டியையாவது கொண்டு வந்து வைத்து, அதன் மேல் ஏறி இங்கு மங்கும் பார்த்துக்கொண்டே பையில் மெள்ள கையைப் போட்டு ஒரு சிகரெட்டையும் நெருப்புப் பெட்டியையும் எடுத்துக்கொண்டு தனியாகச் சென்று பற்றவைப்பேன். முதல் முதலில் சிறிது மயக்கம் தோன்றியது. அதில் பழக்கப்பட்ட பிறகு சிகரெட்டைப் பிடிக்கமுடியாது கை சுடும்வரை குடிப்பேன். பலநாட் கள்ளன் ஒருநாள் அகப்படுவான் என்பதற்கிணங்க ஒருநாள் குடித்துக்கொண்டிருக்கும் சமயம் தாய் கண்டுவிட்டாள். தந்தையிடம் சொல்வதாகப் பயமுறுத்தினள். ஆனால் என்பாலுள்ள அன்பினால், தந்தையிடம் சொன்னால் என்னை அடிப்பாரென பயந்து அதைச் சொல்லவில்லை. இதனால் எனக்குத் தாய் மீதிருந்த பயம் நீங்கினது மன்றி சிகரெட் குடிப்பதையும் நிறுத்தவில்லை. ஆ! அவ்விதம் வாலா விருத்தனின்

முடிவை அவள் அறியாள். அதுதான் அன்பென நினைத்தாள் போலும். அன்பு மிகவும் அவசியம்; ஆனால் அதற்கும் ஒரு அளவுவேண்டும். அவள் எதை அன்பென நினைத்தாளோ அதே என்னை தீய வழியில் புகும் பயத்தை நீக்கினதுமன்றி மேலும் மேலும் என்னை அவ்வழியில் செல்லத் தூண்டியது. மக்களின் குற்றங்களை மறைப்பது அவர்களை அவ்விதம் மீண்டும் செய்யத் தூண்டுவதுபோலவே யாகும்.

இத்துடன் எனது செய்கை நின்றுவிடவில்லை. எனது பாட்டி பொடிப் போடுவாள். அதை ஒரு பழைய டப்பியில் அடைத்து வைத்திருப்பாள். டப்பி காணாமற்போனால், உணவுகூட அருந்தாது, அதைத் கண்டு பிடிக்கும் வரை புத்தி ஸ்வாதீன மிழந்து வீடு முழுவதும் சுற்றுவாள். நான் சில வேளைகளில் வேண்டுமென்றே டப்பியை ஒளித்து வைத்து விடுவேன். சில சமயங்களில் யாரு மறியாது, பொடியை எடுத்து உறிஞ்சி மூக்கிலும் கண் களிலும் நீர் வடிய அவஸ்தைப்பட்டுக்கொண் டிருப்பேன். சில வேளை டப்பி யைத் திறக்கும்பொழுது கைதவறி கீழே விழுந்துவிடும். சிதறிய பொடியை மண்ணோடு சேர்த்து அள்ளி அவசர அவசரமாக டப்பியில் அடைத்து எடுத்த இடத்தில் வைத்துவிடுவேன். பாட்டி அப்பொடியை கையில் எடுத்துப் பார்த்து முணுமுணுத்துக் கொண்டிருப்பாள். இவ்விதம் சிகரெட் பொடி முதலியன உபயோகிக்கும் வழக்கத்தையும் அவைகளை யாரு மறியாது எடுப் பதிலிருந்து திருடும் வழக்கத்தையும் கற்றுக்கொண்டேன்.

எனக்கு வயது வந்தவுடன் பள்ளியில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். எனது திருவிளையாடல்கள் வீட்டோடு நின்றுவிடவில்லை. வகுப்பில் அடுத்த பையன்களைக் கிள்ளவும், அடிக்கவும், அவர்களுடைய எழுது கோல்களைத் திருடிக்கொண்டு போய்விடவும் ஆரம்பித்தேன். நான் பள்ளிக்கூடத்தை யும் வீட்டைப்போல் நினைத்தேன். ஆனால் ஏமாற்ற மடைந்தேன். கூவரக் கத்தியைக் கண்டு அநேக நாட்களாகிய முகத்தையும், அவசரத்தில் அலங் கோலமாய் கட்டப்பெற்ற பெரிய தலைப்பாகையையும் கொண்ட உபாத்தி யாயரின் உருவம் எனது உள்ளத்தில் அச்சத்தை உண்டாக்கியது. அவ ருக்குமுன் மேஜையின்மேல் ஒரு தடித்த பிரம்பும் ஒருமைக்கூடு பேனாவும் சில புத்தகங்களும் இருக்கும். இடையிடையே அவர் உரத்த தொனியில் "அடே அடே" எனக்கூறி பிரம்பால் மேஜையின்மேல் அடிக்கும் பொழுது எனது உள்ளம் நடுநடுங்கும். அவர் எனது ஒவ்வொரு செய்கையையும் கண் டிக்க ஆரம்பித்தார்; கோபங்கொண்டு அடிக்கவும் முற்பட்டார். அடிக்குப் பயந்து சில குற்றங்களிலிருந்து தப்பித்துக்கொள்ள பொய்யுரைக்க வேண்டி யிருந்தது. நாளடைவில் அதில் தேர்ச்சி பெற்றேன். சிறு சிறு காரணங் களுக்கும் பொய்யுரைக்க ஆரம்பித்தேன். மற்ற பாடங்களோடு, பொய் யுரைத்தல், ஏமாற்றுதல், மற்ற பையன்களோடு சேர்ந்து பீடி சிகரெட் குடித் தல், சீட்டு விளையாடுதல் முதலியன கற்றுக்கொண்டேன். மற்ற பையன்

களின் தூண்டுதலால் சற்று பெரியவனான பிறகு சினிமா நாடகம் முதலியவற்றிற்குச் செல்ல ஆரம்பித்தேன். அதற்காக தாய் தந்தையரிடம் பொய்யுரைத்துப் பணம் பெற்றேன். இரவில் அதிகநேரம் வெளியில் தங்கி யிருந்து வீடு திரும்பும் வழக்கம் உண்டாயிற்று. இக் குற்றத்திலிருந்து தப்பிக்க அநேக தடவை உபாத்தியாயரிடம் சென்று படித்துவந்ததாகக் கூறினேன்.

நான் வாலிபன் ஆனேன். என்னுடன் எனது செய்கைகளும் வாலிபப் பருவத்தை யடைந்தன. காலம் இப்பொழுது முற்றிலும் மாறுபட்டிருந்தது. எனது பாலிய விளையாட்டுகளை -எதை எனது தாய் தந்தையரே கற்றுக்கொடுத்தார்களோ, எவைகளுக்கு தாய் தந்தையரே காரணஸ்தர்களாக இருந்தார்களோ அவைகளை தாய் தந்தையருட்பட யாவரும் தீவினையெனக் கூற ஆரம்பித்தனர். முன் எனது செய்கைகளைக் கண்டு குதூகல மடைந்தவர்கள் இப்பொழுது கோபங்கொள்ள ஆரம்பித்தனர். எச் செய்கைகளால் மற்றவர்களுக்கு என்பால் அன்பு பெருகிற்றோ அதே செய்கைகளால் இப்பொழுது வெறுப்புத் தோன்றிற்று. ஆ தாய் தந்தையரே! இவை யாவற்றிற்கும் காரணம் யாரென இருதயத்தில் கையை வைத்து யோசியுங்கள். எனது வாழ்நாட்களை வீழ்நாட்களாக்கினீர்கள். விளையாட்டு வினையாக மாறியது. உமது அன்பே என்னைப் பல தீச்செயல்களில் புகுத்திற்று. விளையாட்டிற்காக மக்களை மற்றவர்களை அடிக்கச் சொல்வதும், தூஷிக்கச் சொல்வதும், பொய்யுரைக்கக் கற்றுக்கொடுப்பதும் சில தகாத காரியங்களைச் செய்யச் சொல்வதும் அவர்கள் மனதில் வேரூன்றித் தீவினையாக மாறுகிறது. தீச்செயல்களை காட்டிக் கொடுக்காதிருப்பது மின்றி நற்செயல்களை செய்துங் காண்பிக்கவேண்டும். பரந்த நோக்கத்தை உண்டாக்கவேண்டும். தாம் டப்பி டப்பியாகப் பொடியைப் போட்டுக்கொண்டு பாக்கெட் பாக்கெட்டாக சிகரெட்டுகளைக் குடித்துக்கொண்டு மக்களை உபயோகிக்க வேண்டாமெனத் தடுப்பது அறிவீனம்.

தமது குழந்தைகள் பிற்காலத்தில் வீரர்களாகவும் பெரியோர்களாகவும் விளங்க வேண்டுமாயின் சிவாஜி தாதாபாய் நௌரோஜி முதலியவர்களின் தாய்மார்களைப்போல மக்களுக்கு உற்சாக மூட்டும் வீரரசம் பொருந்திய—நல்லொழுக்கத்தை போதிக்கக் கூடிய—பரந்த நோக்கத்தை உண்டாக்கக்கூடிய கதைகளைச் சொல்லவேண்டும். மக்களுக்கு எவ்வித்தையில் பிரியம் அதிகமாயிருக்கிறதென அறிந்து சிறு பிராயத்திலிருந்தே அதில் கவனத்தைச் செலுத்தும்படி செய்து பிற்காலத்தில் தேர்ச்சிபெற்று விளங்கும்படி செய்யவேண்டும்.

---

# ஜோதிடச் சிறப்பு.

(பால சோதிட வித்வான் வ. து. வேலுநாயகர்.)

(112-ம் பக்கத் தொடர்ச்சி)

வநம் ஸமாச்ரிதாயேஅபி நிர்மமாநிஷ்பரிக்ரஹா ஃ
அபிதேபரிப்ருச்சந்தி ஜ்யோதிஷாம்கதிகோவிதம்.

எனவரும் 8 வது சுலோகத்தில் வனவாசி, அகம்பாவ மற்றவன், ஒன்றிலும் பற்றில்லாச் சிலர் ஆகியவர்கள் சோதிடர்களை (அணுகி) எல்லா விஷயங்களை யும் கேட்கின்றார்கள் எனக் கூறியுள்ளார். எனவே இல்லறவாசிகளும், துற வற வாசிகளும் சோதிட சாஸ்திரத்தை விரும்பிக் கேட்கின்றனர் என்பது நன்கு விளங்குகின்றது. மற்றும்,

அப்ரதீமாயதா ராத்ரிர் அநாதித்யம் யதாநபஃ
ததாஸாம் வத்ஸரோராஜ ப்ரமத்யந்த இவாத்வநி

எனவரும் 9 வது சுலோகத்தில் வெளிச்சமற்ற இரவும், சூரியனற்ற ஆகாசமும் எங்ஙனம் பிரகாசிக்கின்ற தில்லையோ அப்படியே சோதிட னில்லாத அரசனும் பிரகாசிக்கின்றானில்லை. அதனால் அவ்வரசன் குருடனுக் குச் சமானமாய் வழி தடுமாறித் திரிகின்றவனாவான் எனக்கூறியுள்ளார். எனவே அரசன் அவைக்களத்தில் சோதிடனும் அவசியம் வீற்றிருத்தல் வேண்டும் என்பது போதரும்; அரசன் மட்டுமன்று அரசனை யொத்த அரும் பெருந் திருவைப் பெற்ற பெருஞ் செல்வர்களும் தம்பால் அத்தியாவசியமாக சோதிட னொருவனை வைத்திருத்தல் வேண்டுமென்பது அங்கை நெல்லிக் கனிபோல் அறியக்கிடக்கின்ற துணர்க. யாதுபற்றி எனின் ?

தூயநல் விழியாஞ் சாதகச்சுருதி தோன்றிடும் மன்பதைக்கு அரும்பொன்
ஆயநல் குதலிற் சகாயன்போன் மற்றும் ஆபதகடற் கொருபுணைபோன்
நேயமார் வெளியாத் திரையமயத்தின் ஏர்தரும் அமைச்சனே போலும்
தீயன அகற்றி நன்மையைப் பயக்குஞ் செயலினு லிதற்கிணை யெதுவே.

எனவரும் எமது "* சோதிட குப்புச் சுவாமியம்" விவேக இயலில் கூறிய படி சோதிட சாஸ்திர மூலமாக சோதிடர்களால் எழுதப்படும் சாதகத்தி னால் இன்னோரன்ன அரிய விஷயங்கள் அதாவது பொருள் ஈட்டுவதில் சினே கிதனை யொப்பவும், ஆபத்தாகிய கடலைக் கடப்பதில் தெப்பத்தைப் போல வும், யாத்திரை செய்வதில் மந்திரியைப் போலவும் அறியப்படுதலின் சோதி டர்கள் பெருந் திருவாளர்களாயுள்ள ஒவ்வொருவர் சமூகத்திலும் அத்தியா வசியம் இருத்தல் வேண்டும் என்பது விளங்கும். தெய்வத் திருவருள் சிறந்து விளங்கிய நமது மன்னர் பெருந்தகையாம் விக்கிரமாதித்திய கோமக னுடைய அவைக்களத்தில் விளங்கிய சோதிட சிரோமணி நமது வராஹ மிகிரனாரவர்களாவர்.

---

* இந்நூல் இப்போது அச்சிடப்பட்டு வருகிறது; முன்பணம் ரூபா 2—0—0 அனுப்பி வேண்டுவோர் தம் பெயரை ரிஜிஸ்டர் செய்து கொள்வார்களாக.

முன்வினையின் நிலைதோன்றும் அதன்பயனை நுகர்கால
முறைமை தோன்றும்,
முக்காலப் பயன்றோன்றும் நல்வினைகள் செய்கால
மூர்த்தந் தோன்றும்,
மன்பதையோ ரியல்தோன்றும் வாழ்நாளின் வரைதோன்றும்
வாய்மை தோன்றும்
மழைபொழியும் நெறிதோன்றும் வானுலவு சோதிகளின்
மகிமை தோன்றும்,
பின்னிலையின் வழிதோன்றும் பிறந்ததனு லுறுபயனின்
பெட்புத் தோன்றும்,
பிறப்புரிமைச் சுகந்தோன்றும் வினைசெகுத்து நலமெய்தும்
பீடு தோன்றும்,
சொன்னபல நலந்தோன்றும் மனத்தகத்தின் உண்மைநெறி
தோன்றும் தோன்றும்,
துலங்குறுசோ திடமுணர்ந்த தவப்பெரியோர் தமக்கென்னும்
தோகைமாதே.

எனவரும் எமது குப்புச்சுவாமியம் பாயிரவியல் செய்யுளினால் சோதிடத்தால் தோன்றுபவை இவை என நன்கறியலாம். பொருள் வெளிப்படையாதலின் உரை அவசியமில்லை எனவிடுத்தாம். சோதிடமுணர்ந்த தவப்பெரியோர் என்ற பிரயோகத்தினால் சாமானிய சோதிடர்களைச் சமஸ்தானத்து அவைக்களத்திற்குரியசோதிடராகக்கொள்ளல் பயனில்லையென்பது நன்குவிளங்கும். ஆகவே சோதிடமானது துறவறத்தினரும் விரும்பத்தக்கதென்னின் இல்லறத்தாருக்கு அது எத்துணை பயனளிக்கத்தக்கதென்பதனை ஆசிரியர் வராஹமிகிரனார் சொல்லாமற் சொல்லி விளக்கி யிருக்கின்றனர்.

முஹூர்த்தம் திதிநக்ஷத்ர ம்ருதவச் சாயநே ததா
ஸர்வாண்யேவா குலாநிஸ்யுர்நஸ்யாத்ஸாம்வத்ஸரோயதி
தஸ்மாத்ராக்ஞாபிகந்தவ்யோ வித்வாந்ஸாம்வத்ஸரோ அக்ரணீ:
ஜயம்யசஃ ஸ்ரீயம்போகாந் ச்ரேயச்ச ஸமபீப்ஸதா

என வரும் 10, 11-வது சுலோகங்களில் சோதிடனில்லாவிட்டால் முகூர்த்தம், திதி, நட்சத்திரம், இருது, வருடம் முதலியன அறியவியலாத காரணத்தினால் தலைகீழாய்ப் போய்விடும். இந்தக காரணத்தினால் ஜயம், கீர்த்தி, ஸ்திரீ போகம், மங்களம் முதலியவற்றிற்கு எவன் ஆசைப்படுகின்றானோ அவன் வித்வ சிரோன்மணியான (கெட்டிக்காரனான) சோதிடனிடத்தில் சொல்லிக்கொள்ள வேண்டியது மிக முக்கியமாகும்.

அன்னையினு மிக்கவுயர் அருங்குருவின் அருள்வேண்டும்
அன்பு வேண்டும்
அனுதினமும் தெய்வவழி பாடுஞற் றுதல்வேண்டும்
அனந்த நூலின்

மன்னுமிய லுணர்ந்திடுமா மதிவேண்டும் கணிதமுணர்
 வாய்மை வேண்டும்
வையகத்தி னனுபவமோ மிகவேண்டும் மனச்சாந்தம்
 வாய்த்தல் வேண்டும்
துன்னிய விண்டலச்சோதி செயலுணருஞ் சேதனத்தின்
 றுலக்கம் வேண்டும்
சொல்லரிய மதியூகத் தாட்டிகமோ தனிவேண்டும்
 தூய்மை வேண்டும்
மின்னியவிர் நூலுரைக்கும் விதிவிலக்கை அறிந்துணர
 வேண்டும் வேண்டும்
மேதினியில் வேதவிதி ஓதிடுஞ் சோதிடர்க்கென்றும்
 விளம்பி னேலோ

எனவரும் குப்புச்சுவாமியச் செய்யுளால் இன்னனைய குணத்தன்மை யுடையவர்கள் எவரோ அவர்களே சோதிட வித்வ சிரோமணிகள் எனப்படுவர் என்பது தெளியப்படும். அவர்கள் பால் சோதிடங் கேட்டுணர்தலே சாலக்கற்ற நல்லறிவாளர்களாம் சான்றோர்களின் கடமையாகும். அங்ஙனம் கேட்காமல் கண்டவர்களிட மெல்லாம் பெயர் மாத்திரத்தால் சோதிடரென மயங்கிச் சோதிடங் கேட்டால் பயனற்ற காரியமேயாகும்.

சாத்திரத்தை முறைப்படியே கற்றறியார் அதனுண்மை
 தனையோர்ந் துய்யார்
தன்னொப்பிந் நிலவுலகில் யாரென்பார் வாய் ஞானம்
 சாற்றல் தன்னில்
காத்திரமோ மிகவுடைய சில்லோர்தம் கனவினிலுங்
 கணித மோரார்
கன்மனத்துச் சிற்றறிவோர் புடத்தன்மை இன்னதெனக்
 கருத்தி லெண்ணார்
ஆத்திரமும் பேராசைச் சூழ்ச்சிகளும் மிகவுடையார்
 அகிலந் தன்னில்
ஆதிமுதற் பரம்பரையாய் சோதிட மெங்குலத் தொழில் என்று
 அறைவார் மற்றோர்
சாத்திரத் தோராயினுஞ்சற் றேனுமுன மகிழ்வுகொளார்
 நாக் கடிப்பாய்
நவின்றிடுவார் இவருளத்தின் பான்மையை நங்குகபரமே
 நவிலு மலோ

என்ற குப்புச்சுவாமியச் செய்யுளால் விளக்கப்பட்ட இயல்புள்ள சோதிடர் பால் அறிஞர்கள் ஒருபோதும் சோதிடங் கேட்டல் கூடாது. ஆகவே அறிவிற் சிறந்த ஆப்தர்கள் உண்மை யுணர்ந்த உயர் சோதிடப் புலமை யமைந்த பெரியார்பால் தமது சாதக முகூர்த்த முதலியவைகளை அமைதியாக அறிந்து கொள்ளுதல் நன்றாகும்.

(தொடரும்)




## கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(126-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமீ முதலியார்.**

இராஜவேல் அப்படியே செய்வதாய் ஒப்புக்கொண்டதே ஆனந்தலிங் வண்டியை யோட்டத் தொடங்கினன்.

ஆனந்தலிங் வண்டியை யோட்டிக்கொண்டே போகும்போது சற்று தூரத்தில் கிட்டு முக மூடியிட்ட ஒரு ஸ்திரீயை யழைத்துக்கொண்டு வருவதைக்கண்டு துரிதமாய் வண்டியை விட்டான். அதே சமயம் ஒரு சந்தின் வழியாய் வேறொரு வண்டி அதிக ஆத்திரத்தோடு வந்து கொண்டிருந்தது. ஆனந்தலிங் அவ்வண்டியை யோட்டி வருவது தான் அறையில் போட்டுப் பூட்டிவந்த பிச்சன் என்று தெரிந்து கொண்டான்.

கிட்டும் மனோன்மணியும் ஆனந்தலிங்கின் வண்டி யருகில் வந்து விட்டார்கள். பிச்சன் அவசரத்தோடு கிட்டுவை நோக்கி ஏதோ சமிக்கைகள் செய்கிறான். கிட்டு திரும்பிப் பார்த்துவிட்டு மறுபடி கலவரத்தோடும் பிரமையோடும் ஆனந்தலிங்கின் முகத்தை நோக்கினன். இதற்குள் பிச்சன் வண்டியின் நுகத்தடி ஆனந்தலிங் வண்டியின் பின்பக்கம் வந்து முட்டியது.

இராஜவேல் சட்டென்று வண்டியின் கதவைத்திறந்தான். மனோன்மணி யவனைக்கண்டதும் தன்னை யழைத்து வந்த கிட்டு, இன்னும் மற்றபேர்களும் கலவரமடைந் திருப்பதையும் வண்டிவந்த வேகத்தையும் கண்டு பயந்து ஆனந்தலிங்கின் வண்டியிலேறப் பாய்ந்தாள்.

கிட்டுவைவிட உன்னிப்பாய் யாவும் பார்த்துக்கொண்டிருந்த பிச்சன் சட்டென்று கீழே குதித்து வண்டியிலேறக் காலைத்தூக்கிய மனோன்மணியைப் பிடித்துத் தன் வண்டிக்குத் தூக்கிச்செல்ல முயன்றான். மனோன்மணி, " இராஜவேல் இராஜவேல்! என்னைக்காப்பாற்று " என்று கூவினள். இராஜவேல் கீழே இறங்கினன். அதற்குள் பிச்சன் வருமுன் விவகாரம் முடிந்து விடுமென்று நம்பியிருந்த ஆனந்தலிங், விவகாரம் இப்படித்திரும்பி விடவே கொக்கைப்போல் சமயத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தானதலால், சட்டென்று கீழே குதித்ததும் ஒரு கரத்தால் மனோன்மணியைப் பிடித்துக்கொண்டு மற்றொரு கரத்தால் பிச்சனுடைய கன்னத்தில் ஓங்கி யொரு குத்து விட்டான். பிச்சன் அடியற்ற மரம்போல் பூமியில் சாய்ந்து விட்டான். மறு நிமிடம் ஆனந்தலிங் மனோன்மணியை வண்டிக்குள் போட்டதும் பின்னாலேயே இராஜவேலையும் உள்ளே தள்ளிக் கதவை மூடிக்கொண்டு ஒரு பாய்ச்சலாய் வண்டிமேல் ஏறி அதிவேகமாய் வண்டியை விட்டான்.

ஆனந்தவிங் பின்னால் திரும்பிப் பார்த்தபோது ஸ்மாணை யற்றிருக்கும் பிச்சன் வண்டியில் போடப்படுவதையும், வண்டிக்குள் உட்கார்ந்திருந்தகுள்ள சாரதி யாசனத்தில் உட்கார ஏறுவதையும் கண்டதே யிவர்கள் துரத்திவரத் தொடங்குகிறார்களென்று தெரிந்து கொண்டான். இவர்கள் இப்படித் துணிந்து வருவதன் காரணம் என்னவென்று சிந்தித்தான். இப்படி நடப்பது இராஜவேலின் தந்திரம் என்று இவர்கள் கருதியிருக்கவேண்டும் என்று அவன் புத்தியிற் பட்டது. இதனால் அவர்களுக்கு இதில் ஒரு துப்பறிபவன் இருந்து வேலை செய்கிறான் என்று தெரிந்து கொள்ளா திருப்பது மிக்க நலமென்று சந்தோஷ மடைந்தான்.

ஆனந்தவிங் மிக்க துரிதமாய் வண்டியை விட்டுக்கொண்டு சென்றான். பின்னால் அந்த வண்டியும் விடாமல் தொடர்ந்து கொண்டே வருகிறது. கால்மணி நேரம் கழித்துப் பின் வண்டி சட்டென்று நின்றதும், மூர்ச்சை தெளிந்த பிச்சன் வண்டியிலிருந்து குதித்துத் தன்னை யேமாற்றியவனை யெப்படியாவது பிடிக்கவேண்டு மென்று தானே சாரத்தியம் செய்ய ஏறி யுட்கார்ந்தான்.

அதற்குள் ஆனந்தவிங்கின் வண்டி நெடுந்தூரம் சென்று விட்டது. அச்சமயம் முன்னே சென்றுகொண்டிருக்கும் இன்னொரு வண்டியை ஆனந்தவிங் கண்டதும் அவன் மனதில் ஒரு யோசனை புதித்தது. சட்டென்று அந்த வண்டிக்காரனை நிற்கச் சொல்லி, அவனிடம் சென்று ஒரு பத்து ரூபாய் நோட்டை அவன் கையில் வைத்து "ஒன்றும் கேட்க வேண்டாம். அதோ பின்னால் வரும் வண்டி யுன்னைத் தாண்டிக்கொண்டு வாராமல் கூடியவரையில் தடை செய்" என்று கூறினான். அவன் "சற்றும் பயப்படாது செல் நான் பார்த்துக்கொள்கிறேன்" என்றான்.

ஆனால் ஆனந்தவிங் வண்டியை நிறுத்தி இந்தத் தந்திரமான ஏற்பாட்டைச் செய்துவிட்டு முன்னிருக்கும் வண்டியைக் கடந்து ஒரு கெஜ தூரம் செல்வதற்குள் பிச்சன் வண்டி யருகே வந்துவிட்டது.

இன்னும் ஐந்து நிமிடத்தில் நம் எதிரியைப் பிடித்து விடலாமென்று சந்தோஷ மடைந்து, முன்செல்லும் வண்டிக்காரனை நோக்கி "கொஞ்சம் விலகு, கொஞ்சம் விலகு" என்று கூவினான். அவனோ "இதோ விதோ" என்று கூறிக்கொண்டே சுமார் பத்து நிமிடம் இவனுக்கு வழிவிடாமலே கடத்திவிட்டான். பிச்சன் கோபத்தோடு வைது கூச்சலிட்டான். முன் வண்டிக்காரன் குதிரை மிரண்டுவிட்ட பாவனையாய் வண்டியைப் பூராய்க் குறுக்கேயே திருப்பிப் பாதையை யடைத்துக்கொண்டான்.

அப்போதுதான் "இது உளவின்மேல் நடக்கிறது, நம் எதிரி இவனிடம் ஏதோ ஏற்பாடுசெய்துவிட் டிருக்கிறான்" என்று பிச்சன் உணர்ந்து அச்சமயம் அங்கிருந்த வலது பக்கத்துச் சந்து வழியாய் சென்று பக்கத்து வீதியின் கோடியில் போய் இவ் வீதிக்கு வந்தால் நம் விரோதியைச் சுலபமாய்ப் பிடித்துக் கொள்ளலாம் என்று தீர்மானித்து அப்படி தன் வண்டியைத் திருப்பி விட்டான்.

பின்னால் கண் வைத்துக்கொண்டே செல்லும் ஆனந்தவிங் தூரத்தில் பிச்சன் வண்டி சந்தில் திரும்பியதைக் கண்டதும் அவன் நோக்கத்தை யுணர்ந்து, அப்பா சனிவிட்டதென்று, தன் வண்டியை இடதுபக்க மிருந்த ஒரு சந்து வழியே திருப்பி பக்கத்து வீதி வழியாய் வந்ததிக்கே திரும்பி விட்டான்.

## 11-வது அத்தியாயம்.

ஆனந்தஸிங் இனி தொடர்ந்து வருவாரின்றி நிம்மதியோடு இராஜ வேலின் அத்தை வீட்டின் எதிரில் கொண்டுபோய் வண்டியை நிறுத்தி இராஜவேலையும் மனோன்மணியையும் அங்கு விட்டு விட்டு, நான் இதோ கால் மணியில் வருகிறேனென்று கூறிவிட்டு, வண்டியைக் கொண்டுபோய் ஒரு ஹோட்டலில் விட்டு விட்டு குதிரைக்குத் தீனியளிக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பி யிவர்களிடம் வந்தான். அப்போது மனோன்மணி பயமும் திகிலும் இன்னும் நீங்காமல் நடுக்கத்தோடு உட்கார்ந் திருப்பதைக் கண்டான்.

ஆனந்தஸிங் இராஜவேலை ஒரு தனியறைக்கு அழைத்துப்போய் "மனோன்மணி யென்ன கூறினாள்?" என்று வினவினான்.

இராஜவேல் "அவள் ஒன்றுமே கூறவில்லை. வீட்டை விட்டுச் சென்ற தற்குக் காரணமே கூறமாட்டேனென்று மறுத்து விட்டாள்" என்றான்.

ஆனந்த:—நீ என்ன கூறினாய்?

இராஜவேல்:—அவளைக் களவாடிக் கொண்டுபோக அக்கள்வர் ஏற்பாடு செய்திருந்த தாகவும் நீ யவர்கள் எண்ணம் நிறைவேற வொட்டாது தடுத்து அவளைக் காப்பாற்றிக் கொண்டு வந்ததாகவும் கூறினேன்.

ஆனந்:—"சரி, தாழ்வாரத்தில் மனோன்மணியோடுகூட உன் அத்தை உட் கார்ந்துகொண் டிருக்கிறார்கள். அந்தம்மாளைப் பக்குவமாய் அப்புறம் அழைத்துக்கொண்டு போ. மனோன்மணியிடம் தனியாய்ப் பேச வேண்டும்" என்றான்.

இராஜவேல் அப்படியே செய்தபின் ஆனந்தஸிங் மனோன்மணி யருகிற் சென்று, "அம்மா! நான் ஒரு துப்பறிபவ னென்றும், உன் தந்தை யுன்னைக் கண்டு பிடிப்பதற்காக யமர்த்தியிருக்கிறா ரென்றும் இராஜவேல் உன்னிடம் கூறியிருக்கிறா னல்லவா?" என்றான்.

மனோன்மணி:—ஆம் ஐயா.

ஆனந்த:—இப்போது நான் உன்னைக் கண்டு பிடித்து விட்டேன். இனி சங்கதியை யுன் தாய் தந்தையரிடம் கூறலா மல்லவா?

மனோ:—ஆகா கூறலாம். ஆனால் நான் மறுபடி வீட்டிற்குள் வரமாட்டேன்.

ஆனந்:—ஆனால் உன் பிரிவால் உன் பெற்றோர்படும் மனோவேதனையைப் பற்றிச் சிந்தித்துப் பார்.

மனோ:—நான் முன்னமே யதைப்பற்றி ஆலோசித்தேன்.

ஆனந்:—சிந்தித்தும் அது உன் மனதை யிளகச்செய்ய வில்லையா?

மனோ:—ஹா! அய்யா! தங்களுக்கு நான் இதுகாறும் அநுபவித்த துன்பங்கள் எப்படிப்பட்டவை யென்று தெரிந்தால்......

ஆனந்தஸிங் இரக்கத்தோடும் அன்போடும் அவளை நோக்கி, நீ யநுபவித்ததைப்பற்றி நான் சற்றும் சந்தேகப் படவில்லை. ஆனால் நீ யேன் என்னைப் பூரணமாய் நம்பலாகாது? என் மனநோக்க முழுமையும், உன் பெற்றோர் க்ஷேமத்தைப் பற்றியும் உன் பூரண க்ஷேமத்தைப் பற்றியுமே யாகும். உண்மையாய்க் கூறுகிறேன். உன் நன்மைக்காகவே நீ என்னைப் பூரணமாய் ஒரு சந்தேகமும் வைக்காமல் நம்பலாகும். உனக்குப் பிரிய மில்லாத எதையும் செய்யும்படி நான் உன்னைத் தொந்திரை செய்ய மாட் டேன்" என்றான்.



# வர்த்தமானப்பகுதி

**பேய்பிடித்த புதர்:—**

ஸ்காத்லாந்தில் ப்யாலி பெர்த் கரையில் உள்ள ஓர் பேய் பிடித்துள்ளதென நினைக்கப்பட்ட புதரினின்றும் திடீரென 'ஆ! அன்பே! காப்பாற்று' என்று குரல் கேட்டதால் அங்கு கூடாரமடித்திருந்த ஓர் இளைஞர் கூட்டம் வேறிடத்திற்குச் சென்றுவிட்டது. அதில் தைர்யமுள்ள ஒரு சிறுவன் அப்புதரில் புகுந்து பார்த்ததில் அதிலுள்ள ஓர் பெருச்சாளி வங்கில் கூட்டோடு இருந்த கிளிதான் பேசியதாக ஏற்பட்டதாம்.

**ஓய்வறியாத ஊழியக்காரன்:—**

பிரைட்டனிலுள்ள ஆர்தர் ப்ராட்ஷா என்னும் குமாஸ்தா சென்ற 45 வருஷங்களில் சமீபத்தில் ஒரு வாரம் லீவு வாங்கியதைத் தவிர இது வரையில் ஓய் வெடுத்துக்கொண்டதே கிடையாதாம். இவருக்கு நோய் வந்ததே கிடையாதாம். கல்யாணத்திற்காகக் கூட லீவு எடுத்துக் கொள்ளவில்லையாம். வாரமொருமுறை இவர் விளையாட்டுச் சங்கத்திற்குப் போவாராம். வார மிருமுறை தம் மனைவியோடு சினிமா பார்த்துவரச் செல்வாராம். இதைத் தவிர இவர் வீண் களியாட்டத்தில் வெறும் பொழுது போக்கிய தில்லையாம். இவருடைய மனைவி இவரை மூடன் என்று நினைக்கின்றாளாம்.

**காட்டில் வாழும் காரிகை:—**

பிலக்ஸின் பென்னக் பேரனஸ் ஆன பெர்க் பெக் என்னும் பெண்மணி கொடும் விலங்குகள் சஞ்சரிக்கும் ஆப்ரிகா காட்டில் வீடு கட்டிக் கொண்டு வாழ்ந்து வருகிறாள். அவளிருக்குமிடத்திற்கு மிகச் சமீப ரயில்வே ஸ்டேஷன் 150 மைல் தூரத்திலுள்ளதாம்; அவ்விடத்தினின்றும் 300 மைல்கள் வரை யாதொரு தபாலாபீசும் கிடையாதாம். அவளது வீட்டைச் சுற்றிலும் அழகான புல் வெளிகள் உண்டாக்கப்பட்டுள்ளதாம். அவ்வெளிகளில் சிங்கங்கள் அடிக்கடி வெயிலில் காய்வதற்காக வந்து படுத்துக் கொள்ளுமாம். சில சமயங்களில் இவைகள் மிகவும் அதிகமாகி விடுவதால் இவைகளைக் கொல்லும்படி நேருகின்றதாம். புலி, கரடி முதலிய துஷ்ட மிருகங்களுக்கும் அங்கு பஞ்சமில்லையாம்.

**கிழவன் குமரனாதல்:—**

'வைட்டமின்' என்னும் ஜீவசத்துப்பொருளைக் கண்டு பிடித்த டாக்டர் காஸிமர் பங்க் என்பவர் வயது சென்ற ஆண்களைக் குமரர்களாக்கும் முறையொன்றைக் கண்டு பிடித்துள்ளாராம். ஆண்மைக் குரிய சத்துப் பொருள்களில்லாமையே பலகீனத்தை உண்டாக்குகிறதென்றும், அத்தகைய சத்துப்பொருளொன்றைத் தாம் கண்டு பிடித்திருப்பதாகவும், அதை உடம்பில் ஊசியால் குத்திக் கொண்டால் இதனால் புத்துணர்ச்சியுண்டாகுமென்றும் கூறுகின்றார். இச்சத்துப் பொருளை மாத்திரைகளாகச் செய்தும் உபயோகிக்கலாமாம்.

—:(o):—

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**சுக்கில வருஷ ஐப்பசி மாதம்—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1339—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,**
**இங்கிலீஷ் 1929 வருஷம் அக்டோபர் மாதம் — நவம்பர் மாதம்**

| ஐப்பசி | அக்டோபர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | வியா | சது31-30 | உத்21-13 | சித்60 | துலாஸ்நாநாரம்பம் [கம் |
| 2 | 18 | வெ | ○28-53 | ரேவ20-33 | அமி60 | பௌர்ணமி, அன்னாபிஷே |
| 3 | 19 | சனி | பிர25-8 | அஸ்18-38 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 20 | ஞா | துதி20-23 | ப※15-50 | சித்60 | கிருத்திகை, அசூன்யசயன |
| 5 | 21 | திங் | திரி15-8 | கிரு12-20 | ம12-20அ | சங்காஷ்டசதுர்த்தி [விரத |
| 6 | 22 | செவ் | சது9-25 | ரோ8-35 | அ8-35சித் | கரிநாள் |
| 7 | 23 | புத | பஞ்3-38<br>சஷ்57-53 | மிரு4-38 | சித்60 | அவமாகம், சுவாதி கார்த்<br>திகை நா-16-35 |
| 8 | 24 | வியா | சப்52-13 | திரு0-33<br>புன56-48 | மர0-33அ | வித்தியாரம்பம், வியாதி<br>யஸ்தர் குளிக்க |
| 9 | 25 | வெ | அஷ்46-55 | பூச52-13 | மர60 | அசோகாஷ்டமி |
| 10 | 26 | சனி | நவ31-58 | ஆயி50-13 | ம50-13அ | நவக்கிரகசாந்தி செய்ய |
| 11 | 27 | ஞா | தச37-38 | மக47-40 | மர47-40சி | சுபகாரியம் விலக்க |
| 12 | 28 | திங் | ஏகா33-58 | பூர45-53 | சித்60 | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 13 | 29 | செவ் | துவா31-3 | உத்44-53 | அ44-53சி | |
| 14 | 30 | புத | திர29-5 | அஸ்44-50 | ம44-50சி | நரகசதுர்தசி ஸ்நானம் |
| 15 | 31 | வியா | சது28-15 | சித்45-48 | சி45-48அ | தீபாவளி பண்டிகை |
| 16 | 1 | வெ | அ●28-33 | சுவா48-3 | சித்60 | சர்வத்ர அமாவாசை, கேதா<br>ரிகவுரி விரதம் |
| 17 | 2 | சனி | பிர30-10 | விசா51-30 | சித்60 | |
| 18 | 3 | ஞா | துதி33-0 | அனு56-13 | மர60 | |
| 19 | 4 | திங் | திரி37-20 | கேட்60 | சித்60 | |
| 20 | 5 | செவ் | சது42-33 | கே2-3 | மர2-3அமி | |
| 21 | 6 | புத | பஞ்48-30 | மூல8-50 | ம8-50அமி | |
| 22 | 7 (நவம்பர்) | வியா | சஷ்54-53 | பூரா16-10 | சித்60 | |
| 23 | 8 | வெ | சப்60 | உத்23-38 | சி23-38மர | |
| 24 | 9 | சனி | சப்0-50 | திரு30-38 | சித்60 | |
| 25 | 10 | ஞாய | அஷ்6-10 | அவி36-38 | மர36-38சி | |
| 26 | 11 | திங் | நவ10-18 | சத41-20 | சி41-20மர | |
| 27 | 12 | செவ் | தச12-48 | பூர45-43 | ம45-43அ | உத்தான ஏகாதசி |
| 28 | 13 | புதன் | ஏகா13-25 | உத்45-30 | சி45-30மர | சர்வ மத்வ ஏகாதசி |
| 29 | 14 | வியா | து12-10 | ரேவ44-48 | சி44-48அ | உத்தான துவாதசி |
| 30 | 15 | வெ | திர9-10 | அஸ்42-38 | அ42-38சி | விருச்சிகரவி-நா-33-43<br>கடைமுழுக்கு ஸ்நானம் |

| | | | |
|---|---|---|---|
| | ராகு | குரு | |
| | 16-துலா-புத<br>22-துலா-சுக்<br>23-விரு-செ | | |
| சனி | | கு-செ<br>கே | புதன்<br>சுக் |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.